# கொலம்பியா வெளியீடு



## V.V. சடகோபன், B.A.

பாடிய

GE.6287 { எந்த வேடுகொந்து
2 பாகங்கள் (ஸரஸ்வதி மநோகரி)

முன் வெளியீடு :

GE. 6125
ராம பஜனை செய்தால்
2 பாகங்கள்



GE.6039
ஸ்ரீ வேணு கோபால
காண வேணும்...

G H RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்

1 — 10-3

# மேலும் லைப்பாய் பழக்கத்தை அவள் கற்றிருக்கிறாள்!



அவள் இப்பொழுது தாயாருக்கு உதவி செய்துகொண்டு, தன் வாழ்க்கைக்கு அறிய வேண்டுவனவற்றைப் படிப்படியாக அறிந்து வருகிறாள். நாள்தோறும் லைப்பாய் சோப்பை உபயோகிக்க தாயும் அவளுக்குக் கற்பிக்கிறாள். ஒவ்வொரு குடும்ப ஆரோக்கியத்திற்கும் சந்தோஷத்திற்கும் ஆபத்தான அழுக்கு அபாயத்திலிருந்து தப்பித்துக் கொள்ள அவளுக்கு பாதுகாப்பை அளித்திருக்கிறாள்.




**லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது**

**அது ஒரு நல்ல பழக்கம்.**




# கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 31


# என்ன சேதி?

## பாட்டி யில்லை !

நாளது மார்ச்சு மாதம் மூன்றாவது
ரத்தில் சென்னை மாகாணத்தில்
ாதுத் தேர்தல் நடைபெறப்போகிறது.
டிவு என்ன வென்பது எல்லாருக்கும்
ச்சயமாய்த் தெரிந்திருப்பதுதான்.
ன்ற தேர்தலின்போது ஜஸ்டிஸ் கட்சி
ர் பெரும்பாலான தொகுதிகளில்
ாட்டி அபேட்சகர்களை நிறுத்தி உற்
கம் பெருகுவதற்கு ஒத்தாசை செய்
ர்கள். இந்தத் தடவை அவர்கள் அந்த
த்தாசை செய்யவில்லை. எனவே,
ங்கிரஸ் அபேட்சகராக நிற்பவர்கள்
தொகுதிகளில் போட்டி யில்லாம
யே வெற்றி பெற்று விடுகிறார்கள்.
ிவிதம் மொத்தம் 68 காங்கிரஸ் அபேட்
ர்கள் இதுவரையில் போட்டி யின்றி
ற்றி பெற்றிருக்கிறார்கள். இந்த மகத்
ன வெற்றி காங்கிரஸ் மகாசபை
ாது மக்களின் ஆதரவை எவ்வளவு
ரம் பெற்றிருக்கிறது என்பதற்கு அத்
ட்சியா யிருப்பதோடு, தேச மக்களின்
ந்திர ஆர்வத்துக்கும் அறிகுறியாகும்.

## வாட்டர்கள் உரிமை

எல்லா ஸ்தானங்களையும் அப்படிப்
ாட்டியில்லாமல் விட்டு விட்டால்
நஷ்டப் பட்டுவிடும் என்பதற்காகவோ,
ன்னமோ, சிற்சில தொகுதிகளில்
ர்தல் நடைபெறுகிறது. தேர்தல்
டைபெறும் தொகுதிகளில் பெரும்
லும் கேள்வி என்ன வென்றால், எதிரி
பேட்சகர்கள் டெபாஸிட்டை இழப்
ர்களா, மாட்டார்களா என்பதே.
ற்றப்படி காங்கிரஸ் அபேட்சகர்களின்
ற்றியைக் குறித்து எவ்வித சந்தேக
ம் கிடையாது. இருந்த போதிலும்,
வற்றிதான் நிச்சயமாயிற்றே' என்று
பேட்சகர்களும் வோட்டர்களும் அலட்
மா யிருந்து கோட்டை விட்டு விடக்
ாது. தேர்தல் நடக்கும் இடங்களில்
ாட்டர்கள் எல்லாரும் தங்கள் வோட்டுரிமையை அவசியம் உபயோகப்படுத்திச் சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் 100-க்கு 100 வெற்றி யடைந்தது என்ற பெருமையை அளிக்க வேண்டும்.

## உபாத்தியாயர்கள் கவனிக்க!

மாணாக்கர்கள் அனைவரும் பார்த்து குதூகலப் படும்படியாக சென்ற திங்கட்கிழமை யன்று பம்பாய் மாகாணத்தில் முதல்தரமான 'ஸ்டிரைக்' ஒன்று நடந்திருக்கிறது. மேற்படி 'ஸ்டிரைக்'கை நடத்தியவர்கள் வேறு யாருமில்லை. பள்ளிக்கூட உபாத்தியாயர்கள்தான். சாதாரணமாக, பள்ளிக்கூடங்களை மூடுகிறார்கள் என்றால் அதற்கு முக்கிய காரணம் அங்குள்ள மாணாக்கர்களாய்த்தான் இருக்க முடியும். ஆனால், பம்பாய் உபாத்தியாயர்கள் சிஷ்யர்களுக்கு மிஞ்சிய குருவாகி விட்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

சென்ற திங்கட்கிழமை பம்பாய் மாகாணத்தில் பல இடங்களில் சுமார் 45,000 ஆரம்ப ஆசிரியர்கள் தங்களுக்கு அதிகச் சம்பளம் வேண்டுமென்ற காரணம் கூறி, வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள். இதன் பலனாக லட்சக் கணக்கான மாணாக்கர்கள் பள்ளிக்கூடம் போக முடியாமல் மேற்படி காட்சியை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்களாம்.

பம்பாய் மாகாண ஆசிரியர்களைப் பின்பற்றிச் சென்னை மாகாண ஆசிரியர்களும் வேலை நிறுத்தம் செய்தால் எவ்வளவு ஜோரா யிருக்கும்? அதிலும் ஆரம்ப ஆசிரியர்கள் மட்டுமின்றி ஹைஸ்கூல், காலேஜ் ஆசிரியர்களும் சேர்ந்து 'ஸ்டிரைக்' செய்தால், ஒரே அமர்க்களமா யிருக்குமென்பதில் சந்தேக மில்லை. சென்னை மாணாக்கர்கள் எடுத்ததற்கெல்லாம் தாங்களே ஸ்டிரைக் செய்து விடுமுறை பெற்று உற்சாகப்பட வேண்டியிருப்பதால், உபாத்தியாயர்களாகவே முன் வந்து 'ஸ்டிரைக்' செய்து மாணாக்கர்களைத் திணற அடிக்கலா மல்லவா?

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: வரதராஜன், 25, மெயின் தெரு, சந்தான கோபாலபுரம், விழுப்புரம்.

## உணவுப் பயிர் செய்யுங்கள்!

நிர்வாக சபை அங்கத்தினர்களும், சர்க்கார் உத்தியோக
தர்களும் உணவுப் பஞ்சம் நீடிக்கும் வரை, பொதுஜனங்க
தாங்களே வழிகாட்டியாக இருக்கவேண்டு
மென்று வைஸ்ராய்பிரபு தெரிவித்திருக்கிறார்.

ஊஸ்மான் ஸ்ரீவத்ஸவா காரே






# சந்நியாச பட்ஜெட்!

இந்தியா தேசத்தைச் சுமார் இருநூறு வருஷ காலமாக ஏகபோகமாய் ஆண்டு வந்த ஜான்புல் அவர்களுக்குத் திடீரென்று வைராக்யம் பிறந்திருக்கிறது. ''இது என்ன உலகம்? எப்பேர்ப்பட்ட நன்றியில்லாத உலகம்? இந்த இந்தியா தேசத்தை, பஞ்சம் பட்டினியில்லாமல் சண்டை சச்சரவு இல்லாமல் பகைவர் படையெடுப்பு இல்லாமல் இத்தனை காலமாக நாம் பாதுகாத்து வந்திருந்தும், அதற்காக நம்மைக் குறித்து ஒரு நல்ல வார்த்தை சொல்வார் இல்லையே? அடக்கி வைத்திருக்கிறோமென்றும், கொடுமைப் படுத்துகிறோமென்றும், கொள்ளையடிக்கிறோமென்றும் பழிதானே சொல்கிறார்கள்? வேண்டாம்; நமக்கு வேண்டாம் இந்த தேசம்! உலக வாழ்க்கையே நமக்கு வேண்டியதில்லை. சந்நியாசியாய்ப் போய்விடுவோம்!'' என்று ஜான்புல் துரை தீர்மானித்திருக்கிறார்.

அப்படித் தீர்மானித்தவர் கொஞ்சமும் பொறுப்பு இல்லாமல் போட்டது போட்டபடியே போட்டு விட்டுக் கதவைப் பூட்டாமலும் கணக்கு சரியாக எழுதாமலும் கிளம்பி விட்டார் என்று பயப்படுகிறீர்களோ? அந்த பயம் வேண்டாம். ஜான்புல் துரை அப்படியெல்லாம் செய்யப்பட்டவரல்ல. போன வருஷத்து வரவு செலவுக் கணக்கையெல்லாம் ஒழுங்கு படுத்தி எழுதி விட்டு, வரப்போகிற வருஷத்துக்கு வரவு செலவு ஐட்டங்களையெல்லாம் சரிக்கட்டி எழுதி விட்டுத்தான் புறப்படுகிறார்! சந்நியாசம் வாங்கிக் கொள்ளும் பொருட்டுத் தலையை மொட்டையடித்துக் கொள்ள வேண்டுமல்லவா? அதற்காக நாவிதருக்குக் கொடுக்கப் போகும் க்ஷவரக் கூலி உள்படக் கணக்கு எழுதி வைத்திருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

* * *

இந்திய சட்ட சபையில் சென்ற வாரத்தில் பொக்கிஷ மெம்பர் ஸர் ஆர்ச்சிபால்டு ரோலண்ட்ஸ் துரை இந்திய சர்க்காரின் வரவு செலவுத் திட்டத்தை ஆஜர் செய்ததோடு, அதை விளக்கும் விரிவான யாதாஸ்தையும் ஆஜர்ப்படுத்தினர். அப்படி ஆஜர்ப்படுத்தும்போது தம்மால் கொண்டு வரப்பட்ட முதலாவது வரவு செலவுத் திட்டம் இதுதான், கடைசியான வரவு செலவுத் திட்டமும் இதுதான் என்று அறிவித்தார். அதை விட முக்கியமாக, இந்தியாவுக்கென்று இங்கிலீஷ்காரரால் தயாரிக்கப்படும் பட்ஜட் இதுதான் கடைசியாயிருக்கும் என்று தாம் நம்புவதாகவும் தெரியப் படுத்தினர். நாமும் அப்படியே நம்புகிறோம். ததாஸ்து!

இவ்விதம் ஒரே வைராக்யத்துடன், ''இந்தியா இனிமேல் நம்முடையதில்லை'' என்ற பிடிவாதத்துடன், ஸர் ரோலண்ட்ஸ் பட்ஜெட்டைத் தயாரித்திருந்த போதிலும், ஏதோ காமா சோமாவென்றும் கன்னா பின்னாவென்றும் கணக்கிலே குளறுபடி கேஷன்களுடன் தயாரித்து விடாமல், கேவலம் காலணாவையும் ஒரு தம்பிடியையும்கூட அற்பமென்று விட்டு விடாமல், ''கணக்கு என்றால் கணக்குத்தான்!'' என்ற அடிப்படையின் மீது பட்ஜட்டைத் தயாரித்திருப்பதை நாம் பாராட்டியே தீரவேண்டும். மேலும், தாம் தயாரித்த பட்ஜெட்டின் முக்கிய அம்சங்களெல்லாவற்றையும் அக்குவேறு ஆணிவேறாகப் பிரித்து எடுத்துக் காட்டி ''அப்புறம் என் பேரில் குற்றம் சொல்லாதீர்கள்! நன்றாகக் கவனித்துக் கொள்ளுங்கள்!'' என்று எச்சரிக்கையும் செய்திருக்கிறார். அதற்குமேலே, சர்க்கார் வரவு செலவுத் திட்டத்துக்கு ஆதாரமாயுள்ள தேசத்தின் பொருளாதார நிலைமையையும் சுட்டிக் காட்டி, ''இதோ பாருங்கள் பொக்கிஷம்! காலணாக் கூட இல்லாமல் காலியாகக் கிடக்கிறது! இதோ பாருங்கள் களஞ்சியம்! ஒரு தானியம் கூட இல்லாமல் சுத்தமாய்த் துடைத்து வைத்திருக்கிறது! நன்றாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்! அப்புறம் எங்கள் பேரில் குறை சொல்லாதீர்கள்'' என்று திட்டமாக எச்சரிக்கை செய்திருக்கிறார்.

இதற்காகவெல்லாம் இந்திய சர்க்காரின் கடைசி ஆங்கில பொக்கிஷ அங்கத்தினரான ஸர் ஆர்ச்சிபால்டு ரோலண்ட்ஸ் துரைக்கு நன்றி செலுத்துவதோடு அவருடைய ஆபத்

சந்நியாச பட்ஜெட்டையும் நாம் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

* * *

மேற்படி பட்ஜெட்டின் மிக முக்கியமான அம்சங்கள் என்பதாகத் தினசரிப் பத்திரிகைகளின் தலைப்பிலே எடுத்துப் போட்டிருக்கும் புள்ளி விவரங்கள் என்னென்ன வென்பது நேயர்களுக்கு ஞாபகம் இருக்கலாம்.

வரப்போகும் 1946-47-ம் வருஷத்தில் இந்திய சர்க்காரின் உத்தேச வரவு ரூ. 307 கோடி.

உத்தேசச் செலவு ரூ. 355 கோடி.

துண்டு விழுமென எதிர்பார்க்கும் அதிகப்படி செலவு ரூ. 48 கோடி.

இப்படியாகச் செலவுக்கு வேண்டிய அளவு வருமானம் இல்லாமல் துண்டு விழுந்த போதிலும் கூட, நமது பொக்கிஷ அங்கத்தினர் அதைக் கொஞ்சம் கூடச் சட்டை செய்யாமல், தைரியத்தைக் கையிலே பிடித்துக்கொண்டு, பல பல வரிகளைக் குறைத்துவிட மனமுவந்து தீர்மானித்திருக்கிறார்.

ஈ. பி. டி. என்னும் அமிதலாப வரி அடியோடு தொலைக்கப்படும்!

கிரோஸின் எண்ணெய்க்கு ஒரு காலனுக்கு முக்காலணா விதமும் பெட்ரோலுக்கு ஒரு காலனுக்கு 3 அணா விதமும் வரி குறைக்கப்படும்.

வருமான வரி படித்தர வாரியாக, ஒன்றே காலணாவிலிருந்து ஓரணாவுக்கும், இரண்டணா ஒரு தம்பிடியிலிருந்து இரண்டணாவுக்கும் குறைக்கப்படும்.

லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளுக்கு வரி, ஐந்தே காலணாவிலிருந்து ஐந்தணாவுக்குக் குறைக்கப்படும்.

மற்ற லிமிடெட் கம்பெனிகளின் வருமான வரி விகிதமும் குறைக்கப்படும்.

இந்த மாதிரியெல்லாம் வரி இனங்களில் குறைவு செய்திருப்பதனால் இந்திய சர்க்கார் மொத்தம் ரூ. 21½ கோடி நஷ்டமடைவார்கள்!

ஆகா! அதனால் என்ன? வருமான வரி கொடுக்கும் மகா ஜனங்களுடைய நன்மைக்காக இந்திய சர்க்கார் ஏன் நஷ்டம் அடையக் கூடாது?

அதிகப்படிச் செலவு கடனாக நின்றால் நிற்கட்டுமே? என்ன மோசம் வந்துவிடும்? எப்படியாவது ஆட்டைத் தூக்கி மாட்டிலே போட்டு, மாட்டைத் தூக்கி ஆட்டிலே போட்டுக் கணக்கைச் சரிக் கட்டிக்கொண்டால் போகிறது?

கடைசி கடைசியாக ஆங்கிலப் பொக்கிஷ மெம்பர் தயாரிக்கும் சந்நியாச பட்ஜெட்டில் வருமான வரி இனங்களையாவது குறைக்காமற் போனால், அப்புறம் சந்நியாசம் வாங்கிக் கொண்டு தான் என்ன பிரயோஜனம்?

* * *

எனவே, இந்திய சர்க்காரின் வரவு செலவுத் திட்டமானது வெகு சுபிட்சகரமாய் விளங்குவதையும், "நீ கொஞ்சம் எடுத்துக்கொள்; நீயும் எடுத்துக்கொள்!" என்று வாரிவாரிக் கொடுப்பதையும் பார்த்தோம். இனிமேல் தேசத்தின் வரவு செலவு நிலைமை எப்படியிருக்கிறது, எப்படி இருக்கப் போகிறது என்று கொஞ்சம் பார்க்கலாம். நல்லவேளையாக, நமது பொக்கிஷ மெம்பர் அந்த தேசப் பொது நிலைமையை நாம் அறிந்துகொள்வதற்கான சில குறிப்புகளையும் கொடுத்துத் தானிருக்கிறார். கேளுங்கள்:—

## உட் பகைவர்கள்

1. "நமது வெளிப் பகைவர்களை நாம் வென்றுவிட்டோம்; ஆனால் உட் பகைவர்கள் இன்னும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் யார் என்றால், தரித்திரம், நோய், படிப்பின்மை, போஷணைக் குறைவு, வேலைக் குறைவு ஆகியவைதான். இவை எல்லாவற்றுக்குள்ளும் முக்கியமான பகை தரித்திரம். அதைத் தொலைத்து விட்டால் மற்றப் பகைவர்களையும் எளிதில் தொலைக்கலாம்."

அருமையான உண்மையை அருமையான முறையில் எடுத்துச் சொல்லியிருக்கிறார் அல்லவா?

## சாமான்கள் குறைவு

2. "ஜனங்களின் உபயோகத்துக்குரிய சாமான்களில் ரொம்பவும் குறைவு ஏற்பட்டிருக்கிறது. இந்தக் குறைவு வெளி நாடுகளிலிருந்து சாமான்கள் வராமையினாலும், உற்பத்தி சாதனங்களை யுத்த காரியங்களுக்கு உபயோகப் படுத்தியதாலும் ஏற்பட்டது. முக்கியமாக, ஜவுளியும் தானியங்களும் தேவைக்கு ரொம்பவும் குறைந்து போயிருப்பது தெரிந்த விஷயமே. ஆகையால் அதைப் பற்றி அதிகம் நான் சொல்லத் தேவை இல்லை."

நாமும் அதிகமாக ஒன்றும் சொல்ல வேண்டியதில்லைதான்! மேற்படி சாமான் குறைவு தேசத்தில் மிகப் பயங்கரமான பஞ்சத்தை உண்டாக்கப் போகிறது என்பதைத் தவிர வேறு என்னதான் சொல்லுவதற்கு இருக்கிறது?

## பணத் தட்டு

3. "யுத்தச் செலவுகள் குறையும் காரணத்தினால் ஜனங்களிடையே பணத் தட்டு ஏற்படத்தான் செய்யும். இந்திய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காருமாகச் சேர்ந்து இந்தியாவில் செய்துவந்த யுத்தச் செலவில் 600 கோடி ரூபாய் வரும் வருஷத்தில் குறையப் போகிறது என்பதை யோசித்தால், மேற்படி பணத் தட்டு எவ்வளவு தூரம் ஜனங்களைப் பாதிக்கும் என்று ஊகித்துக் கொள்ளலாம்."

ஆமாம்; நிச்சயமாக ஊகித்துக் கொள்ளலாம். இந்திய மக்களுக்கு யுத்தம் காரணமாகப் பல வகைகளிலும் கிடைத்த வருமானம் 600 கோடி ரூபாய் திடீரென்று குறையப் போகிறது! இதனால் தேசத்தில் பணத்தட்டு ஏற்படாமல், வேறு என்ன ஏற்படும்?

## வேலைப் பஞ்சம்

4. "யுத்தகாலத்தில் இராணுவத்தில் சேர்க்கப் பட்டவர்களில் பதினைந்து லட்சம் பேருக்கு மேல் திருப்பி அனுப்பி யாக வேண்டும். வருகிற வருஷ முடி வுக்குள்ளே அவர்களைத் திருப்பி அனுப்புகிற காரியம் முடிந்து விடு மென்று எதிர்பார்க்கப்படுகிறது. இது ஒரு பக்கம் நடக்கையில் மற்றொரு பக்கம் இராணுவத்துக்காகச் சாமான் வாங்கும் இலாகாக்களையும், யுத்த தள வாடத் தொழிற்சாலைகளையும் மூடி யாக வேண்டும். இராணுவ சம்பந்த மான கட்டிட வேலைகளையும் நிறுத்தி யாக வேண்டும்!"

அதாவது, இராணுவம் சம்பந்தமான வேலைகளிலிருந்து மட்டும் எத்தனையோ லட்சம் பேர் விடுதலை யடைந்து வீட் டுக்குத் திரும்பப் போகிறார்கள்!

இராணுவத்துக்குச் சாமான் சப்ளை செய்த எத்தனையோ தொழிற் சாலைகள் மூடப்படப் போகின்றன.

ஆகக் கூடி, மொத்த முடிவு என்ன வென்றால், இந்தியா தேசத்தில் வருகிற வருஷத்தில் தானியப் பஞ்சம், துணிப் பஞ்சம் இவற்றோடு கூட, பணப் பஞ்சமும் வேலையில்லாப் பஞ்சமும் சேர்ந்து சக்கைப் போடு போடப் போகின்றன!

வெளி நாடுகளுக்கு ஓடு எடுத்துச் சென்றிருக்கும் சர்க்கார் தூதர்களின் முயற்சி பலிதமடைந்து லட்சக்கணக் கான டன் தானியம் இந்தியாவுக்கு வந்த போதிலும், அந்த தானியத்தை வாங்குவதற்குப் பணம் இல்லாமல் எத்தனையோ லட்சம் பேர் தவிக்கப் போகிறார்கள்; அதாவது பணம் சம்பா திப்பதற்கு வேலை கிடைக்காமல் ஜனங்கள் திண்டாடப் போகிறார்கள்!

* * *

இந்திய நாட்டின் நிலைமையை ஒருவாறு பார்த்துத் தெரிந்துகொண்ட நாம், சற்று இன்னொரு பெரிய தேசத்தை எட்டிப் பார்க்கலாம்.

சென்ற மூன்று வருஷத்தில் உலகமே கண்டிராத மகா பயங்கரமான படை யெடுப்புக்கு ருஷியா உள்ளாயிற்று. எத்தனையோ வயல்களையும் வீடு வாசல் களையும் தொழிற்சாலைகளையும் எதிரி களின் கையில் விழாமல் இருப்பதற்காக ருஷியர்களே கொளுத்தி விட்டார்கள்.

அப்பேர்ப்பட்ட கற்பனைக் கெட்டாத கஷ்ட நஷ்டங்களுக்குள்ளான ருஷியா தேசத்தில் இன்று ஒரு விதமான பஞ்ச மும் இல்லை.

உணவுப் பஞ்சம் இல்லை!

பணப் பஞ்சம் இல்லை!

வேலைப் பஞ்சம் இல்லை!

ருஷியாவின் மிகுந்திருக்கும் அதிகப் படி கோதுமையை இந்தியாவுக்குக் கொடுத்து உதவக் கூடாதா என்று சமீபத்தில் ஸர் ஏ. ராமசாமி முதலியார் முறையிட்டதை நாம் அறிவோம்.

பத்து நாளைக்கு முன்னால் ஸ்டாலின் ருஷிய மக்களுக்குச் செய்த பிரசங் கத்தில் "ருஷியா நின்ற நிலையில் இருந்து விடக் கூடாது. முன்னைவிடப் பன் மடங்கு வேகமாக முன்னேற வேண்டும். தொழில் வளமும் பொருள் வளமும் பெருக வேண்டும். இதற்கு இடையூறு நேராமல் பாதுகாக்க இராணுவ பலமும் பெருக வேண்டும்" என்று கூறியதாகப் படித்தோம்.

யுத்த காலத்தில் ருஷிய விஞ்ஞானிகள் கண்டு பிடித்த புதிய சாதனங்களை யெல்லாம் தேச முன்னேற்றத்துக்கு ருஷியாவில் பயன்படுத்தப் போகி றார்கள் என்றும் அறிந்தோம்.

* * *

நல்லது: ருஷியாவை எட்டிப் பார்த்து விட்டு மறுபடியும் இந்தியா வுக்குத் திரும்பி வருவோம். இங்கே என்ன பார்க்கிறோம்?

கண்ணுக் கெட்டிய தூரம் நிலங்கள் ஒரு பயனும் இல்லாத பொட்டைத் தரி சாகக் கிடப்பதைக் காண்கிறோம்.

நதிகளில் ஓடும் தண்ணீர் கடலில் விழுந்து வீணாவதைக் காண்கிறோம்.

கோடானு கோடி ஜனங்களின் உழைப்பு, பயன்படுத்த வழியில்லாமல் பாழாவதையும் பார்க்கிறோம்.

பஞ்சமும், பிணியும், பணத்தட்டும் எங்கும் பரவிக் கிடப்பதைப் பார்க்கிறோம். அவற்றின் பயங்கரம் இன்னும் அதிகமாகப் போவதாக எச்சரிக்கைகளையும் கேட்கிறோம்!

இது என்ன பைத்தியக்காரத்தனம்? இது என்ன மௌடீகம்?

இவ்வளவு நில வளத்தையும் நீர் வளத்தையும் வைத்துக் கொண்டு, நாற்பது கோடி மக்களின் உழைப்பு பலத்தையும் வைத்துக் கொண்டு, பஞ்சத்தையும் பிணியையும் இந்தியா தேசம் எதிர் நோக்குவானேன்? இந்தியாவின் பிரதிநிதிகள் அன்னிய நாடுகளுக்கு ஓடு எடுத்துக் கொண்டு கிளம்புவானேன்?

சரியான முறையில் தேசத்துக்கு வரவு செலவுத் திட்டம் போட்டு, சரியான முறையில் அதை நிறைவேற்றி வைக்க ஏற்பாடு செய்யாததினால்தான்!

• • •

இந்தியா தேசத்துக்காக உண்மையில் தயாரிக்கவேண்டிய வரவு செலவுத் திட்டம் இதுதான் :—

1. இந்தியாவின் நாற்பது கோடி மக்களுக்கும் நல்வாழ்வு நடத்துவதற்கு உணவும் உடையும் குறைந்த பட்சம் எவ்வளவு தேவை என்று கண்டு பிடிக்கவேண்டும்.

2. மேற்படி இரண்டு தேவைகளையும் பூர்த்தி செய்வதற்குரிய விவசாய வளர்ச்சித் திட்டமும், தொழில் வளர்ச்சித் திட்டமும் போட வேண்டும்.

3. தரிசு நிலங்களை வளப்படுத்துவதற்கும், நீர் வளத்தைப் பயன்படுத்துவதற்கும் திட்டம் போட வேண்டும்.

4. அருவி வீழ்ச்சி முதலிய இந்தியாவின் இயற்கைச் சக்திகளைப் பூரணமாய்ப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டம் போட வேண்டும்.

5. நாற்பது கோடி மக்களில் உழைப்பு அளிக்கக் கூடியவர்கள் எவ்வளவு பேர் என்று கண்டு பிடித்து அவ்வளவு பேரையும் உழைப்பில் ஈடுபடுத்தத் திட்டம் போட வேண்டும்.

6. நாற்பது கோடி மக்களுக்கும் உடையும், உணவும் பகிர்ந்து கொடுக்கவும், கல்வியும் வைத்திய வசதியும் அளிக்கவும் திட்டம் போட வேண்டும்.

தேச முன்னேற்றத்துக்காகவும், பஞ்சத்தைத் தவிர்ப்பதற்காகவும் தயாரித்து நிறைவேற்ற வேண்டிய உண்மையான பட்ஜெட் திட்டம் மேற்கண்டதுதான்.

இந்திய சட்ட சபையில் இப்போது விவாதிக்கப்பட்டு வரும் சர்க்கார் வரவு செலவுத் திட்டம் ஊரை ஏமாற்றும் போலித் திட்டமே யாகும்.

# ராஜாஜி

ராஜாஜி சட்டசபைத் தேர்தலிலிருந்து விலகிக் கொண்டு விட்டார்.

அவரை அறிந்தவர்களுக்கும் அவருடன் நெருங்கிப் பழகியவர்களுக்கும் மேற்படி செய்தி சிறிதும் வியப்பை யளித்திராது.

இந்த முடிவை இத்தனை நாளும் அவர் தள்ளிப் போட்டு வந்ததுதான் பலருக்கு ஓரளவு ஆச்சரியத்தை அளித்திருக்கும்.

• • •

ஜனாப் ஆஸப் அலி சென்னைக்கு வந்திருந்தபோது ராஜாஜியை ஆதரிக்கின்ற காங்கிரஸ் வாதிகள் சுமார் நூறு பேர் தினந்தோறும் மாலை டாக்டர் சுப்பராயன் வீட்டு மாடியில் கூடி வந்தார்கள். கடைசி தினம், எல்லாரும் பிரிந்து போகவேண்டிய சமயம் வந்தபோது, ராஜாஜி சம்பந்தமான முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டு உதவி செய்தவர்களுக்கு ஸ்ரீ சிவஞான கிராமணி நன்றி செலுத்தினார். ஒவ்வொருவராக நன்றி சொல்லி வந்த பிறகு, முடிவில் அவர் கூறியதாவது:— "கடைசியாக, ஆனால் எல்லாரினும் முக்கியமாக, தலைவர் ராஜாஜிக்கு நன்றி செலுத்துகிறேன். எந்த நிமிஷத்தில் அவர் விதுரரைப் போல் வில்லை முறித்துப் போட்டு விட்டுப் போய் விடுகிறாரோ என்று நாம் ஒவ்வொருவரும் சந்தேகப்பட்டுக் கொண்டுதானிருந்தோம். ராஜாஜி அந்த மாதிரி ஒன்றும் செய்யாமல் உறுதியாக இருந்தது பற்றி அவருக்குத்தான் நாம் முதன்மையாக நன்றி செலுத்த வேண்டும்!" என்று கூறியதை அங்கிருந்த அனைவரும் ஆமோதித்துக் கரகோஷம் செய்தார்கள்.

ஆனால் கடைசியாக அந்தக் காரியம் நடந்துதான் விட்டது! விதுரர் வில்லை முறித்து விட்டுப் போய்விட்டார்!

• • •

ராஜாஜியிடம் அபிமானம் கொண்ட நண்பர்களில் அரசியல் பற்று அதிகம் இல்லாத பலர் அவரை அடிக்கடி, 'இந்தத் தொல்லை யெல்லாம் உங்களுக்கு எதற்கு?" என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். "உங்கள் பேரில் 'பதவி மோகம்' 'அதிகார ஆசை' என்றெல்லாம் வீண் பழி சுமத்துகிறார்களே? இந்த அவதூறை யெல்லாம் பொறுத்துக் கொண்டா அரசியல் வாழ்க்கை எதற்காக? விட்டுத் தொலைப்பதுதானே?" என்று அவர்கள் மனம் வருந்திச் சொன்னார்கள்.

அதற்கெல்லாம் ராஜாஜி, "பொய்யான பழிகளுக்கும் அவதூறுகளுக்கும் பயந்து என்னுடைய பொறுப்பைத் தட்டிக் கழித்து விடலாமா?" என்று பதில் சொல்லிக்கொண்டிருந்தார்.

ராஜாஜியின் அபிமானிகள் எந்த மனோநிலையில் அவருக்கு மேற்கண்டவாறு யோசனை சொன்னார்களோ, அதே மனோநிலை ராஜாஜிக்கும் ஏற்படக்கூடிய சந்தர்ப்பம் ஒன்று நேர்ந்தது.

தமிழ் நாட்டில் சிலர் மகாத்மாவின் அந்தரங்க சுத்தியையே சந்தேகித்துக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்த போது ராஜாஜிக்கு மேற்படி மனோநிலை ஏற்பட்டது.

இந்தியாவுக்குள்ளேயே தமிழ் மக்கள் மகாத்மா காந்தியிடம் ஒப்பற்ற பக்தியுள்ளவர்கள் என்பது பிரசித்தம். அந்த பக்திக்கு மாசு நேரும்படியான பிரசாரத்தைக் கண்டதும் ராஜாஜி உடனே விதுரர் ஆகி, வில்லை முறித்துப் போட்டார். "எது எப்படியானாலும், தமிழ் மக்கள் மகாத்மாவிடம் கொண்டுள்ள பக்திக்கு மாசு நேரக் கூடாது; அதுவும் என்னால் நேரக்கூடாது!" என்று தீர்மானித்தார்.

அந்தத் தீர்மானத்தை மாற்றிக் கொள்ளும்படி மற்றவர்கள் தம்மைத் தூண்டுவதற்கே இடம் இருக்கக் கூடாதென்று மகாத்மாவுக்குத் தாம் எழுதிய கடிதத்தை அன்றே பத்திரிகைகளில் பிரசுரப் படுத்துவதற்கும் கொடுத்து விட்டார்.

• • •

சட்டசபைத் தேர்தலிலிருந்து ராஜாஜி விலகிக் கொண்டதினால் நலிவுற்றிருந்த அவருடைய தேகம் சௌக்கியமடையும்; அவருடைய உள்ளமும் சாந்தி யடையும். ஆனால் அவருடைய தலைமையையும் சேவையையும் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த எண்ணற்ற தமிழ் மக்களுக்கு அவர் விலகிக் கொண்டதால் மன நிம்மதி ஏற்படும் என்று நாம் சொல்வதற்கில்லை.

தமிழ்நாட்டுக்குக் கூடிய சீக்கிரம் நல்ல காலம் பிறக்கு மென்றும், தமிழ்மக்கள் ஏகோபித்த விருப்பத்துடன் ராஜாஜியின் அரசியல் தொண்டை மீண்டும் கோரிப் பெறுவார்க ளென்றும் எதிர்பார்ப்போமாக.

# சிவகாமியின் சபதம்

கண்ணன

கல்கி

## அத்தியாயம் 25

## புலிகேசியின் கலை மோகம்

**பு**லிகேசி சக்கரவர்த்தி வாதாபியில் இல்லை, — அஜந்தாவுக்குப் போயிருக்கிறான் என்று குண்டோதரன் கூறிய செய்தி அங்கிருந்த நால்வருக்கும் வியப்பையும் குதூகலத்தையும் அளித்தது என்பது அவர்கள் வாயிலிருந்து வந்த விநோதமான சப்தங்களிலிருந்து தெரிய வந்தது.

"அஹஹா!"

"ஓஹ்ஹோ!"

"ஹே ஹே!"

"சே சே!"

என்றெல்லாம் அர்த்தமில்லாத ஓசைகளை வெளியிட்ட பிறகு, ஏககாலத்தில் நால்வரும் குண்டோதரனைப் பார்த்து, "நிஜந்தானா?" "உண்மையா?" "அஜந்தாவுக்கா போயிருக்கிறான்?" "புலிகேசிக்கு அஜந்தாவில் என்ன வேலை?" என்று சரமாரியாகக் கேள்விகளைப் பொழிந்தார்கள். அப்போது மாமல்லர் "இப்படி எல்லாருமாகக் குண்டோதரனைத் துளைத்தால், அவன் எப்படி மறுமொழி சொல்லுவான்? கொஞ்சம் சும்மா இருங்கள். குண்டோதரா! உன் பிரயாணத்தைப் பற்றி ஆதியோடந்தமாக விவரமாகச் சொல்லு!" என்றார்.

குண்டோதரன் சக்கரவர்த்தியைப் பணிந்து விட்டுக் கூறினான்:—"பல்லவேந்திரா! இந்த ஏழை சந்தேகமறத் தெரிந்து கொண்டு வந்த உண்மையைத்தான் கூறினேன். புலிகேசி சக்கரவர்த்தி அஜந்தாவுக்குத்தான் போயிருக்கிறார். யாரோ சீனாவிலிருந்து ஒரு யாத்திரீகன் வந்திருக்கிறானாம். அவன் பெயர் என் வாயில் நுழையவில்லை. — 'ஹியூன் சங்' என்று சொன்னார்கள். அவன் உத்தர தேசத்தில் கன்யா குப்ஜம், காசி, கயா முதலிய க்ஷேத்திரங்களையெல்லாம் பார்த்து விட்டு வந்தானாம். கன்யா குப்ஜத்தில் ஹர்ஷ சக்கரவர்த்தியின் ஆட்சி மகிமையைப் பற்றி அவன் வர்ணித்தானாம். ஹர்ஷ சக்கரவர்த்திக்குத் தான் குறைந்து போய் விடவில்லையென்று காட்டுவதற்காக வாதாபி சக்கரவர்த்தி அந்த யாத்திரீகனைத் தானே நேரில் அழைத்துக் கொண்டு அஜந்தாவின் சிற்ப சித்திர அதிசயங்களைக் காட்டுவதற்காகப் போயிருக்கிறாராம்! பிரபு! இப்போதெல்லாம் புலிகேசி சக்கரவர்த்திக்குக் கலைகளிலே ரொம்ப மோகமாம்! வாதாபியிலுள்ள பாறைகளையெல்லாம் குடைந்து மாமல்லபுரத்துச் சிற்பங்களைப் போல் அமைத்துக் கொண்டிருக்கிறாராம். நமது தொண்டை மண்டலத்திலிருந்து கைகால்களை வெட்டாமல் சிறைபிடித்துக் கொண்டு போன சிற்பிகள் சிலர் அந்தப் பாறைகளில் வேலை செய்வதை நானே பார்த்தேன். ஆனால் ஒரு வேடிக்கையைக் கேளுங்கள். அந்தச் சீன யாத்திரீகன் ஹியூன் சங்கைப் புலிகேசி நேற்படி சிற்பப் பாறைகளுக்கு அழைத்துச் சென்று காட்டியபோது. 'இந்தப் பாறைச் சிற்பங்களைப் பார்த்து விட்டுத்தான் காஞ்சி மகேந்திர பல்லவன் மாமல்லபுரத்தில் இந்தமாதிரி செய்யப் பிரயத்தனப் பட்டான்! அவனுக்கு நல்ல புத்தி கற்பித்து விட்டு வந்தேன்!' என்றானாம். இதைப் பற்றிக் கேட்டபோது எனக்கு என்னமாயிருந்தது, தெரியுமா? இரத்தம் கொதித்

ரது! வாதாபி நாற் சந்தியில் உள்ள ஜயஸ்தம்பத்தில் காஞ்சி மகேந்திர பல்லவரை வாதாபி புலிகேசி புறங் கண்டதாக எழுதி யிருக்கும் பொய்யும் இன்னும் அப்படியேதான் இருக்கிறது. பிரபு! இதற்கெல்லாம் காலம் இன்னும் மூன்று மாதந்தானே என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டு திரும்பி வந்தேன். வாதாபியில் யுத்த ஏற்பாடுகள் ஒன்றுமே நடக்கவில்லை. இந்த வருஷம் நம்முடைய படையெடுப்பை அவர்கள் எதிர்பார்க்கவே இல்லையாம்! வாதாபி சைன்யம் வடக்கே நர்மதைக் கரையிலும் கிழக்கே வேங்கியிலுமாகச் சிதறிக் கிடக்கிறது!......"

இவ்விதம் குண்டோதரன் சொல்லிச் சற்று நிறுத்தியதும், மாமல்லர் பரஞ்சோதியைப் பார்த்து, "சேனாபதி! பார்த்தீரா? நமது சத்ருக்னனுடைய யுக்தி இவ்வளவு நன்றாகப் பலிக்கும் என்று நாம்கூட எதிர்பார்க்கவில்லையல்லவா?" என்றார்.

சத்ருக்னன் அப்போது பணிவான குரலில், "பல்லவேந்திரா! அடியேனுடைய யுக்தி என்று ஏன் சொல்லுகிறீர்கள்? தாங்களும் சேனாபதியும் சேர்ந்து தீர்மானித்ததைத்தானே நான் நிறைவேற்றினேன்?" என்றான்.

அதற்குச் சேனாபதி பரஞ்சோதி, "சத்ருக்னர் சொல்வது உண்மைதான்! எல்லாம் மகேந்திர பல்லவரிடம் நாம் மூவரும் கற்றுக் கொண்டதுதானே? இந்த யுத்தத்திலே நாம் ஜயம் பெற்றோமானால் அதனுடைய பெருமை முழுதும் விசித்திர சித்தருக்கே சேர வேண்டியது!" என்றார்.

"சேனாபதி! 'யுத்தத்தில் ஜயம் பெற்றோமானால்' என்று நீங்கள் சொல்வதை நான் ஆட்சேபிக்கிறேன். ஜயத்தைப் பற்றி என்ன சந்தேகம் இருக்கிறது? ஆனால், எந்த 'யுக்தி'யைப் பற்றி நீங்கள் எல்லாரும் பேசுகிறீர்கள் என்பது எனக்கு விளங்கவில்லை. தயவு செய்து சொன்னால் தேவலை!" என்றான் ஆதித்த வர்மன்.

"அப்படிக் கேள், தம்பி! அதைச் சொன்னால் மகேந்திர பல்லவர் எங்களுக்கு அளித்த பயிற்சி இப்போது எவ்வளவு தூரம் பயன் படுகிறது என்பதைத் தெரிந்து கொள்வாய். சென்ற ஒன்பது வருஷமாக நானும் சேனாபதியும் இந்தப் படையெடுப்புக்காக ஆயத்தம் செய்து வந்தபோது, சத்ருக்னனுடைய ஒற்றர் படையும் மிகத் திறமையாக வேலை செய்து வந்தது. நமது ஒற்றர் படையிலே சிலர் சத்ருக்னனுடைய தூண்டுதலின் பேரில் நமது யுத்த இரகசியங்களை வாதாபி சக்கரவர்த்திக்கு விற்பனை செய்யத் தொடங்கினார்கள்! முதலில் சில காலம் உண்மையான தகவல்களையே அனுப்பிக் கொண்டிருந்தபடியால் புலிகேசிக்கு நம்பிக்கை ஏற்பட்டது. மூன்று வருஷத்துக்கு முன்னால் 'இந்த வருஷம் பல்லவ சைன்யம் வாதாபியின்மேல் படையெடுத்து வரப்போகிறது' என்று செய்தி போயிற்று. புலிகேசி அதை நம்பிப் பெரிய யுத்த ஆயத்தங்கள் செய்திருந்தான். ஆனால், பல்லவ சைன்யம் வராமல் ஏமாந்தான். இப்படியே மூன்று வருஷம் ஏமாந்த பிறகு புலிகேசி கோபங் கொண்டு பழைய ஒற்றர்களை யெல்லாம் தள்ளிவிடச் செய்தான். புதிய ஒற்றர்கள் இந்த வருஷத்தில், 'வாதாபி மேல் படையெடுக்கும் உத்தேசமே இங்கு இல்லை' என்றும், மானவன்மனுக்கு இலங்கையைப் பிடித்துக் கொடுப்பதற்காகவே பல்லவ சைன்யம் சேகரிக்கப் படுகிறதென்றும் செய்தி அனுப்பினார்கள். புலிகேசி மேற்படி செய்தியைப் பூரணமாய் நம்பிவிட்டான் என்று முன்னமே தெரிந்து கொண்டோம். துங்கபத்திரை நதிக் கரையிலிருந்த சளுக்க சைன்யத்தை நர்மதைக்கும் வேங்கிக்கும் பகிர்ந்து அனுப்பி விட்டதாகவும் அறிந்தோம். இப்போது குண்டோதரன் சொல்வதிலிருந்து, புலிகேசியே அஜந்தாவுக்குப் போயிருக்கிறான் என்று தெரிகிறது. சத்ருக்னனின் யுக்தி பலித்திருக்கிறது அல்லவா?"

இப்படி மாமல்லர் கூறி முடித்ததும் "பல்லவேந்திரா! இலங்கை இளவரசர் இந்த வகையிலும் நமக்குப் பேருதவி செய்திருப்பதாகத் தெரிகிறதே! மானவன்மர் காஞ்சியில் வந்து இருந்ததினால் தானே புலிகேசியின் கண்ணில் சத்ருக்னன் இவ்வளவு நன்றாக மண்ணைத் தூவ முடிந்தது?" என்றான் ஆதித்தவர்மன்.



"சமணர்களால் மனம் குழம்பிப் போயிருந்த குமார பாண்டியனை மதுரைக்குத் திருப்பி அனுப்பி விட்டுப் பாண்டிய சைன்யத்தைப் போருக்கு அழைத்துக் கொண்டு வருகிறாரே, அந்த உதவிதான் சாமான்யப் பட்டதா?" என்றான் சத்ருக்னன்.

அப்போது மாமல்லர் கடுமையான குரலில், "மானவன்மன் என்னதான் நமக்கு உதவி செய்திருக்கட்டும்; அவன் என்னை ஏமாற்றிய காரியத்தை என்னால் மறக்கவே முடியாது; மன்னிக்கவும் முடியாது!" என்றார்.

"பல்லவேந்திரா! இது என்ன? தங்களை இலங்கை இளவரசர் எந்த விஷயத்தில் ஏமாற்றினார்?" என்று சேனாபதி கேட்டார்.

"மானவன்மன் நம்மோடு வாதாபிக்கு வரக்கூடாது என்பதற்கு ஒரு முக்கியமான காரணம் அவனுக்கு நான் சொன்னேன். போர்க்களத்தில் அவன் ஒருவேளை வீர சொர்க்கம் போகும்படி நேர்ந்து விட்டால், இலங்கை இராஜ வம்சம் சந்ததி அற்றுப் போய்விடும்; ஆகையால் அவன் வரக்கூடாது என்று சொல்லியிருந்தேன். இந்த விஷயத்திலேதான் மானவன்மன் என்னை ஏமாற்றி விட்டான்!" என்றார் சக்கரவர்த்தி.

"இதில் ஏமாற்றுவதற்கு என்ன இருக்கிறது?" என்றான் ஆதித்தவர்மன்.

"நாம் புறப்பட்டு வந்த ஒரு வாரத்திற்குள் இலங்கை இராஜ வம்சத்துக்குச் சந்ததி ஏற்பட்டு விட்டது! மானவன்மனுடைய மனைவி நாம் புறப்படும்போது பத்து மாதக் கர்ப்பிணியாம். நாம் புறப்பட்ட ஐந்தாம் நாள் அவனுக்கு ஆண் குழந்தை பிறந்ததாம்! இந்த விஷயத்தில் சத்ருக்னன் கூட எனக்கு உண்மையைத் தெரியப்படுத்தாமல் இருந்துவிட்டான்!" என்று மாமல்லர் கூறுவதற்குள்ளே சேனாபதி உள்பட எல்லாரும் கொல் என்று சிரித்தார்கள்.

இதற்கிடையில் "ஓஹோ! இப்போது தெரிந்தது!" என்றான் குண்டோதரன்.

"உனக்கு என்ன தெரிந்தது இப்போது புதிதாக?" என்று மாமல்லர் கேட்டார்.

"பிரபு! அதோ அந்த அரச மரத்தில் நான் ஏறி இருந்தபோது தெற்கே ஒரு பெரிய புழுதிப் படலம் தெரிந்தது. ஏதோ படை திரண்டு வருவதுபோல் தோன்றியது. 'எந்த சைன்யம் இப்படிச் சக்கரவர்த்திக்குப் பின்னால் வருகிறது?' என்று யோசித்தேன். தாங்கள் பேசிக் கொண்டிருந்து இலங்கை இளவரசர்தான் பாண்டிய சைன்யத்துடன் வருகிறார் என்று தெரிந்தது" என்றான் குண்டோதரன்.

"ஓஹோ! அதற்குள் வந்து விட்டானா?" என்று மாமல்லர் கூறிய

போது நிலா வெளிச்சத்தில் அவருடைய முகமலர்ச்சி நன்றாகத் தெரிந்தது. பிறகு, அவர் பரஞ்சோதியைப் பார்த்து, "சேனாபதி! ஆகக்கூடி, நீங்கள் எல்லாரும் என்னதான் சொல்கிறீர்கள்? மானவன்மனுடைய தவறை மன்னித்து அவனையும் நம்மோடு அழைத்துப் போக வேண்டும் என்று சொல்கிறீர்களா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! அழைத்துப் போக வேண்டியதுதான்!" என்று சேனாபதி கூறிய குரலில் ஓரளவு தயக்கம் இருக்கத்தான் செய்தது.

"அப்படியானால் ஒன்று செய்யுங்கள். நீங்கள் மூவரும் கொஞ்சம் முன்னால் நதியைக் கடந்து சென்று இன்றிரவு சைன்யம் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனியுங்கள். நானும் குண்டோதரனும் இங்கேயே இருந்து மானவன்மனை அழைத்து வருகிறோம். குண்டோதரனிடம் நான் கேட்க வேண்டிய சில விஷயங்களும் இருக்கின்றன" என்று மாமல்லர் கூறவும், குறிப்பறியும் ஆற்றல் வாய்ந்த அறிவாளிகளாகிய மற்ற மூவரும் உடனே கிளம்பிச் சென்று, நதியில் அவர்களுக்காகக் காத்திருந்த படகில் ஏறிக்கொண்டார்கள்.



அவர்கள் சென்றதும் மாமல்லர் குண்டோதரனை ஏறிட்டுப் பார்த்தார்.

மெல்லிய குரலில் குண்டோதரன், "பல்லவேந்திரா! வாதாபியில் ஆயனரின் குமாரியைப் பார்த்தேன். சௌக்கியமாயிருக்கிறார். நம்முடைய வரவை இரவும் பகலும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்" என்றான்.

"அந்தப் பாதகியின் சௌக்கியத்துக்கு என்ன குறைவு? சௌக்யத்தையும் சாந்தத்தையும் இழந்து தவிப்பவன் நான் அல்லவா?" என்று நரசிம்மவர்மர் முணுமுணுத்தார்.

அத்தியாயம் 25

## பவளமல்லி மலர்ந்தது

**வா**தாபி மாளிகையில் சிவகாமி சௌக்கியமாகத்தான் இருந்தாள்.

அதாவது அவளுடைய தேகம் சௌக்கியமாக இருந்தது.

ஆனால் அவளுடைய உள்ளமோ ஒரு கணமேனும் சாந்தி காணாமல் அமைதியின்றி அலைந்து கொண்டிருந்தது.

வருஷங்கள் ஒன்றன்பின் ஒன்றாய் வந்து போய்க் கொண்டிருந்தன.

ஒவ்வொரு வருஷமும் வசந்தம், வேனில் முதலிய பருவ காலங்கள் வந்து போய்க் கொண்டிருந்தன.

வருஷங்களையும், பருவ காலங்களையும் கணக்கிடுவதற்குச் சிவகாமி ஒரு வழி கண்டு பிடித்திருந்தாள்.

அவள் வசித்த மாளிகையின் பின் முற்றத்தில் கிணற்றின் அருகில் ஒரு பவள மல்லி மரம் இருந்தது.

சிவகாமி வாதாபிக்கு வந்த வருஷத்திலே அந்தப் பவள மல்லிச் செடியை அவள் தன் கையாலேயே கிணற்றின் அருகில் நட்டாள்.

நாகநந்தி அடிகள் அஜந்தா மலைப் பிராந்தியத்தைப் பற்றி வர்ணனை செய்தபோது, அந்தப் பிரதேசத்தில் ஆவணி புரட்டாசி மாதங்களில் கணக்கில்லாத பாரிஜாத மரங்கள் புஷ்பித்துக் குலுங்கும் என்றும், அந்த நறுமலர்களின் இனிய மணம் நெடுந்தூரம் காற்றிலே பரவி அந்தப் பக்கம் வருவோருக்கெல்லாம் இன்ப போதையை உண்டாக்கும் என்றும் சொன்னார். அதைக் கேட்ட சிவகாமி அந்தச் செடிகளில் ஒன்றைத் தனக்காகக் கொண்டு தரவேண்டும் என்று வேண்டிக் கொண்டாள்.

அவளுடைய வேண்டுகோளைக் கட்டளையாக மதித்த புத்தபிக்ஷு சீக்கிரத்தில் அஜந்தா மலைப் பிராந்தியத்திலிருந்து பவளமல்லிச் செடி ஒன்று தருவித்துக் கொடுத்தார்.

அந்தச் செடியைச் சிவகாமி நட்டுக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து வந்தாள். தண்ணீருடன் கண்ணீரும் விட்டு வளர்த்து வந்தாள்.

அந்தப் பவளமல்லிச் செடியில் முதன் முதலில் இளந்தளிர் விட்ட போது சிவகாமி வேதனைப்பட்ட உள்ளம் துள்ளிக் குதித்தது. புதிய கிளை ஒன்று கிளம்பியபோது துயரத்தால் வெதும்பிய அவள் உள்ளம் குதூகலத்தினால் பொங்கியது. முதன் முதலில் அந்தச் செடியிலே மொட்டு அரும்பிய போதும் அது பூவாக மலர்ந்த போதும் சிவகாமி சிறிது நேரம் தன் துயரங்களை யெல்லாம் மறந்து ஆனந்தக் கடலில் மிதந்தாள். கிளி மூக்கின் வடிவமான அதன் அழகிய இதழ்களையும், செம்பவள நிறம் கொண்ட காம்பையும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள்.

நேரம் ஆக ஆக, சூரியன் வான மார்க்கத்தில் ஏற ஏற, அந்த மெல்லிதழ் மலர் வர வர வாடிச் சுருங்கிக் கடைசியில் கருகி உதிர்ந்தபோது, தற்காலிகமாகக் குளிர்ந்து தளிர்த்திருந்த அவளுடைய இருதயமும் வாடிக் கரு
கித் தீய்ந்தது. அந்த மலர் அவ்வித
சூரிய வெப்பத்தினால் வாடி உதிர்ந்
தற்கும் தன்னுடைய தீவினைதான்
காரணம் என்று எண்ணி மனம் நொ
தாள். வாழ்க்கையில் அவள் அ
பவித்த துன்பங்கள் எல்லாம் ஒ
ன்றாக நினைவு வந்து ஒன்றுக்கு
பத்து மடங்காக அவளை வருத்த
படுத்தின.

செடி ஒன்றாக வேரூன்றிக் கிளைத்து
தழைத்த பிறகு அதைக் கவலையுட
பராமரிக்கும் வேலை சிவகாமிக்
இல்லாமற் போயிற்று. அந்தச் செ
யைக் கொண்டு பருவங்களையு
வருஷங்களையும் சிவகாமி கணக்கிட
வரத் தொடங்கினாள்.

மனிதர்களின் எலும்புவரை குளிர
செய்த பனி காலத்தில் அந்
பவள மல்லி மரத்தின் இலைக
எல்லாம் காய்ந்து உலரத் தொடங்கு
இளவேனிற் காலத்தில் புதிய இள
தளிர்கள் துளிர்க்கத் தொடங்கு
முதுவேனிற் காலத்தில் இலைக
முற்றுவதோடு மொட்டுக்க
அரும்ப ஆரம்பிக்கும். உக்கிரமா
மேலக் காற்றோடு மழையும் கொட்டு
ஆனி ஆடி மாதங்களில் அந்தப் பவ
மல்லிச் செடி பேயாட்டம் ஆ
டாத பாடு படும். அதைப் பார்க்
வும் சகிக்காமல் சிவகாமி வீட்டுக்கு
ளேயே பித்துப் பிடித்தவள் போ
உட்கார்ந்திருப்பாள். ஆவணி பு
டாசி மாதங்களில் அந்தப் பவ
மல்லிச் செடி பச்சைப் பசேல் என்
இலைகளை அடியோடு மறைத்து வி
வதற்குப் போட்டி போடும் மலர்க
குலுங்கப் பெற்று விளங்கும். அந்
காலங்களில் சிவகாமி முற்றத்தி
படிக்கட்டின் மீது உட்கார்ந்து அந்
செடியை வெகு நேரம் பார்த்
கொண்டிருப்பாள். நவராத்திரி
போதும் விஜயதசமி அன்றைக்கு
தமிழகத்தின் ஆலயங்களில் அம்ப
விக்கிரகத்துக்குப் பவளமல்லி ம
களைக் கொண்டு புஷ்பப் பாவாடை
அலங்காரம் செய்வார்கள் என்ப
நினைவு கூர்வாள். அதோடு தா
வாதாபிக்கு வந்து ஒரு விஜயத
ஆயிற்று, இரண்டு விஜயத
ஆயிற்று என்றும் கணக்கிடுவாள்.

இவ்வாறு கணக்கிட்டு வந்த
சிவகாமி வாதாபிக்கு வந்து, ஒன்
வருஷங்கள் ஆகிவிட்டன.

# ஸ்ரீ தியாகராஜஸ்வாமி ★ ★ ★
# ★ ★ ★ ★ நூறுவது ஆராதனை

எ. கிருஷ்ணய்யர் பி. ஏ., பி. எல்.

அடுத்த 1947-ம் வருஷம் ஜனவரி மாதம் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் நூறுவது ஆண்டு ஆராதனை தினம் வரப் போகிறது. அந்நாள் நம் நாட்டிற்கே ஒரு புனித தினமாகும்.

ஸ்ரீ தியாகராஜர் கர்நாடக சங்கீதம் உச்ச நிலை அடைவதற்குக் காரணபூதர். அவர் சாதாரண வாக்கேயகாரரல்ல. பிறவியிலேயே தெய்வ பக்தர். உலக போகங்களை வெறுத்தவர். இராமனை இஷ்ட தெய்வமாகக் கொண்டவர். சங்கீத சாஸ்திரத்தையும் அதன் நுட்பங்களையும் மாசறக் கற்றறிந்தவர். கற்ற வித்தையைக் கடவுளின் இடைவிடாச் சேவைக்கே அர்ப்பணம் செய்தவர்.

உயரிய சாஸ்திர லக்ஷணம், வர்ணமெட்டின் அழகு, ராகபாவம், அர்த்த பாவம் எல்லாம் சிறந்த முறையில் பொருந்தியிருக்கும் கிருதிகளை நூற்றுக் கணக்காக அளித்தார். கிருதியென்ற சௌந்தரிய சங்கீத வடிவத்தை உலகுக்கு அளித்தார். அவை மூலம் பல பழைய ராகங்களின் வனப்பைப் பெருக்கினார். பல புதிய அபூர்வ ரக்தி ராக வடிவங்களை வெளிக் கொணர்ந்தார். அவற்றைப் பல உத்தம சிஷ்யர்களுக்குப் போதித்தார். அரசர்கள், பிரபுக்கள் இவர்களின் தயவையும் நர ஸ்துதியையும் வெறுத்தார். ஆயுள் முழுதும் இராம பக்தராகவே புனித வாழ்வு நடத்தி, இறுதியில் ஆத்ம ஸன்யாசம் பூண்டு இராமபிரான் பாதார விந்தத்தை அடைந்தார்.

ஸ்ரீ தியாகய்யரின் சிஷ்யர்கள் மூலம் வந்த கிருதிகள் நாடெங்கும் பரவின. இன்றைக்கும் அவை, கர்நாடக சங்கீத சாகரத்தின் துறைமுகத் தீபஸ்தம்பங்கள் போல் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன. அவற்றைக் கற்றோருக்கு ஜீவனமும், புகழும் அளித்துக் கொண்டும், அவற்றைக் கேட்போருக்குக் கலையின்பம் அளித்துக்கொண்டும் இலங்குகின்றன.

ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் ஆராதனை தினத்தை வருடந்தோறும் அவர் வாழ்ந்து வந்த திருவையாற்றில், அவர் ஸமாதியின் சந்நிதியில், வித்வான்களும் கலாபிமானிகளும் பக்தர்களும் சேர்ந்து கொண்டாடி வருகிறார்கள். அவரது நூறுவது ஆண்டு ஆராதனை விழாவை நூறு மடங்கு அதிகச் சிறப்பாக நடத்த வேண்டும் என்பது சொல்லத் தேவையில்லை.

மேற்படி கொண்டாட்டத்தை முன்னிட்டு வழக்கமான ஆராதனை வைபவங்கள், கச்சேரிகள் இவை நடைபெறுவதோடு, தியாகப் பிரம்மத்தின் ஞாபகமும், அவர் நமக்கு அளித்திருக்கும் கலைப் பொக்கிஷமும் அழியாது சரியான முறையில் என்றும் நிலைத்திருப்பதற்கும், பின் தலைமுறைகள் அவற்றைக் கொண்டு போதிய பயனடைவதற்கும் சில ஏற்பாடுகள் செய்ய வேண்டுவது அவசியமாகும்.

இதுகாறும் வழங்கி வரும் தியாகராஜ கிருதிகளைச் சேகரித்தும், வழக்கத்துக்கு வராது மூலை முடுக்குகளில் புதைந்து கிடக்கும் மற்றவைகளைத் தேடி எடுத்தும், எல்லாவற்றையும் நன்கு ஆராய்ந்து, பல பாடாந்தரங்களை ஒப்பிட்டுப் பார்த்து, பொதுவாய் ஒப்புக்கொள்ளக் கூடியவைகளை ஸ்திரப்படுத்தி, தீராத சில வித்தியாசங்களை விசேஷ வகையாகக் குறிப்பிட்டு, எல்லாவற்றையும் தெளிவாய் ஸ்வரப்படுத்தி, கிருதிகளின் கருத்து முதலிய விவரங்களையும் வரைந்து, புஸ்தக ரூபமாய் வெளியிட வேண்டுவதே அவருக்குச் சிறந்த ஞாபகச் சின்னமாகும். தவிர, ஸ்வாமிகளின் பெயரில் ஒரு சங்கீத மண்டபமும், சங்கீத புத்தகசாலையும் ஏற்படுத்தலாம். இவைபோன்ற பல உபயோகமுள்ள ஏற்பாடுகளை ஆலோசித்துச் செய்யத் திறமை வாய்ந்த சில பிரமுகர்கள் உழைத்து வருகிறார்கள். எந்த ஏற்பாடும், அதற்காக முன்வரும் பொதுஜன உற்சாகத்தையும், பண உதவியையும் பொறுத்தது. கிடைக்கும்

உதவிக்கும், சேரும் பணத்துக்கும் தக்க வாறு சிறந்த ஏற்பாடுகள் செய்யப்படும் என்பதற்கு ஐயமில்லை.

அவ்வாறு உதவி தேடும் முயற்சிகளுக்கு அங்குரார்ப்பணமாய், மார்ச்சு 2-ம் தேதி மயிலை சங்கீத சபா ஹாலில், சங்கீத கலாநிதி மகாராஜபுரம் விச்வநாதய்யரின் சங்கீதக் கச்சேரி சிறப்பாய் நடந்தது. ஸ்ரீ ராமுண்ணி மேனன் ஐ. சி. எஸ். சபைக்குத் தலைமை வகித்து, தியாகராஜரின் பெருமையையும் சேவையையும் புகழ்ந்து, அவரது நூறாவது ஆண்டு ஆராதனை விழாவின் அவசியத்தையும் எடுத்துச் சொன்னார். பழம்பெரும் வித்வான் டைகர் வரதாச்சாரியார் தமக்கு இயற்கையான ஹாஸ்யச் சுவையுடன் மேற்படி வேண்டுகோளை ஆதரித்து விளக்கினார். ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் புகழைப் பரப்புவதையே தம் வாழ்க்கை லட்சியமாகக் கொண்ட ஸ்ரீமதி அலமேலு ஜயராமய்யர் ஆரம்பத்தில் பேசினார்.

மாண்டர் திருவேங்கனின் வயலின், முருக பூபதியின் மிருதங்கம் ஆகிய பக்க வாத்தியங்களுடன், சங்கீத கலாநிதி மகாராஜபுரம் விச்வநாதய்யரின் கச்சேரி நன்கு அமைந்தது. கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யருக்குப் பின் சங்கீதத் துறையில் தலைவராய் விளங்கிய வித்வானல்லவா? சாரீரத்தில் முன்னிருந்த சோபையை இப்போது எதிர்பார்க்க முடியாவிடினும், அதன் லயத்துக்கோ, பாவத்துக்கோ, ஞானப் பழுப்புக்கோ குறைவில்லை. அன்று எல்லாவற்றையும் பயபக்தியுடனேயே பாடினார். பந்துவராளி, ஸ்ரீரஞ்சனி, கல்யாணி தர்பார் இவைகளோடு, அடாணா, ஆபேரி பல்லவிக்காக சங்கராபரணம் என்று பல ராகங்களையும் உருப்படிகளையும், சிறந்த கற்பனையுடனும், ஸ்வரங்களையும் பொழிந்து பல தடவை கரகோஷம் பெற்றார்.

இம்மாதிரியே மற்ற சங்கீத வித்வான்களுடைய கைங்கரியக் கச்சேரிகளும் ஏற்பாடு செய்யப்படும் என்று தெரிகிறது. எல்லோரும் மேற்படி நூற்றாண்டு ஆராதனை வைபவத்துக்கு பண உதவியும் மற்ற உதவிகளும் செய்ய முன் வர வேண்டும்.



தியாகப் பிரம்ம ஆராதனை வைபவ கைங்கரியத்தில் சிரத்தை கொண்ட சில பிரமுகர்களை இந்தப் படத்தில் காணலாம்.

கீழ் வரிசை (வலது புறமிருந்து):—சங்கீத கலாநிதி விசுவநாதய்யர், டைகர் வரதாச்சாரியார், ஸ்ரீ ராமுண்ணி மேனன், ஸ்ரீமதி ராமுண்ணி மேனன், ஸ்ரீமதி அலமேலு ஜயராமய்யர், ஸ்ரீ கே. எஸ். ஜயராமய்யர்.

மேல் வரிசை (இடது புறமிருந்து):—காரியதரிசி ஸ்ரீ மூசிரி சுப்பிரமண்ய அய்யர், பே[illegible] ஷெதார் ஸ்ரீ டி. டி. நாராயணய்யர் முதலியோர்.



# RAW MATERIALS FROM NATURE

பூமியின் அடியில் தொழிலுக்கு இன்றியமையாத அநேக மூலப் பொருள்கள் அடங்கியுள்ளன. ஆனால் இவை மிகவும் பக்குவமற்ற முறையில் வெளிப்படுகின்றன. தங்கம், இரும்பு அலுமினியம் போன்ற உயர்ந்த உலோக தாது மூலப்பொருள்கள் களிமண் கல், மண் முதலியவற்றுடன் கலந்து அசுத்தமாக இருக்கிறது. இவைகள் பூமியிலிருந்து தோண்டப்பட்டு எடுத்து நல்ல முறையில் மூலப் பொருள்களாகவும் ரசாயனப் பொருள்களாகவும் பிரிக்கப்பட வேண்டும். எஞ்சினீர்களும் விஞ்ஞானிகளும் கண்ட பரிசீலனைகள் செய்து நல்ல சாதனங்களைப் பிரயோகித்து இயற்கை மூலப் பொருள்களை விருத்தி செய்கிறார்கள்.

சமுத்திரத்திலிருக்கும் சாதாரண உப்பு, கடற்கரை ஓரங்களில் காணப்படும் கிளிஞ்சல்கள், நீரோட்டத்திலிருந்து ஆவாகனமான மின்சார சக்தி ஆகியவை ஒரு ரசாயன தொழிற்சாலைக்கு ஆதாரமாக வேண்டியவைகளில் சில. இத்தகைய ரசாயன முன்னேற்றத்தின் பலனால் தென்னிந்தியாவில், மெட்டூர் கெமிகல் அண்டு இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் என்ற முதல்தரமான ரசாயனத் தொழிற்சாலை தோன்றியிருக்கின்றது.

இந்தத் தொழிற்சாலை உற்பத்தி செய்யும் சிறந்த பொருள்கள்: காஸ்டிக் சோடா, ப்ளீச்சிங் பவுடர் பேரியம் க்ளோரைட், சோடியம் சல்பைட், பெர்ரோஸ் சல்பேட், ஸ்ட்ரோண்டியம் நைட்ரேட், இதர வைத்திய மருந்துப் பொருள்கள், காமதேனு வனஸ்பதி காவேரி பார் சோப் முதலியவை.

# நரைமயிர் வயோதிகத்தைக் குறிக்கிறது



**நரையின் மூலகாரணத்தை ஒழித்து யௌவனத் தோற்றத்தைப் பெறுங்கள்**

இளமையில் நரை தோன்றினால், ரோமத்துக்கு அவசியமான சாயம் ரோமக்கால்களுக்குக் கிடைக்கவில்லை என்று தெரிந்து கொள்ளுங்கள்.

ரோமத்துக்கு சாயம் பூசி நரையை மறைக்கலாம். ஆனால் இது சொற்பகாலத்துக்குத்தான் பலனளிக்கும்; மிகவும் சிரமமானது; முடிவில் ரோமத்துக்கும், தலைக்கும் கெடுதியை உண்டாக்கக் கூடியது. நரையை நிச்சயமாகவும், நிரந்தரமாகவும் ஒழிக்க நல்ல அபாயமற்ற வழி "வாஸ்மால்" உபயோகிப்பதுதான்.

"வாஸ்மால்" ரோமத்துக்கு போஷணையளித்து, அவசியமான சாயத்தை ரோமக்கால்களிலேயே உற்பத்திசெய்து, கானடைவில் நரையைப்போக்கி ரோமத்தைக் கறுப்பாக்குகிறது. வெகு சீக்கிரத்தில் பலனளிக்கக் கூடியது. ஒருதடவை உபயோகித்தவுடனேயே சாயத்தை உற்பத்தி செய்யும் பைகளுக்கும் புத்துயிரளித்து, மயிர்க்கால்களைக் கறுப்பாக்கி, முடியில் நரையை அறவே ஒழித்துவிடுகிறது. வாஸ்மால் தைலம் பாட்டில் 1-க்கு ரூ. 4/- முற்றின நரைக்கு வாஸ்மால் கான்ஸென்ட்ரேடெட் போமேட் ஜாடி 1-க்கு ரூ. 8/- எல்லா கெமிஸ்டுகளிடத்திலும், ஸ்டோர்களிலும் கிடைக்கும். நேரிலும் தருவித்துக்கொள்ளலாம். ப்ளோசி லிமிடெட், தபால் பெட்டி நெ. 875, பம்பாய்.




நரையைத் தடுப்பதற்கும், இரும்பயும் கேசத்துக்குக் கறுப்பு நிறத்தை அளிப்பதற்கும் அவசியமான விடாமின் F, விடாமின் B சத்துகள் வாஸ்மாலில் அடங்கியுள்ளன.

## வாஸ்மால்

## நரையை ஒழிக்க

FL 16—Tamil

விநியோகஸ்தர்கள்: விஜயா டிரேடிங் ஏஜென்ஸி, 2/500, தங்கசாலைத் தெரு, பார்க் டவுன் மதராஸ்

# கப்பல் கம்பெனியின் நன்கொடை

★ ★ ★

“கப்பல் ஏறுவாயோ? - கடலைத் தாண்டு வாயோ?” என்று சுதந்திர வருஷத்துக்கு முன்னால் ஆங்கில அதிகார வர்க்கம் இந்திய தேசபக்தனைப் பார்த்துக் கேட்டது.

“கப்பல் ஏறத்தானா செய்வோம்? கப்பல் கட்டவும் செய்வோம்! ஞாலம் நடுங்க வரும் கப்பல்கள் கட்டி நாலு திசைகளிலும் செலுத்துவோம்!” என்று தமிழ் நாட்டிலே ஒரு வீர தேசபக்தர் விடையிறுத்தார்.

அவருடைய சபதத்தை நிறைவேற்று வதற்காக எத்தனையோ இன்னல்களை அநுபவித்து விட்டு இறைவனடி சேர்ந்தார்.

அந்தத் தேச பக்த வீரர் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் கனவு இன்று ஒருவாறு உண்மையாகி யிருக்கிறது. இந்தியர்களுக்குச் சொந்தமான கப்பல்கள் கடல்களில் கம்பீரமாகச் சென்று வருகின்றன.

இந்தியர்களின் மூலதனத்தைக் கொண்டு இந்தியர்களால் நிர்வகிக்கப்பட்டுச் சிறப்பாக நடை பெற்று வரும் ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியைப் பற்றி நேயர்கள் அறிந்திருப்பார்கள்.

இந்தியாவிலேயே முதன் முதலில் கப்பல் தொழில் ஆரம்பித்த பெருமைக் குரியவரான ஸ்ரீ வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்களின் ஞாபகார்த்தமாக ஒரு நிதி வசூலிக்கப் படுகிறதென்று மேற்படி கம்பெனியார் ராஜாஜியின் மூலம் அறிந்து மேற்படி நிதிக்கு ரூ. 2500 நன்கொடை அளித்திருக்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ சாந்திகுமார் நரோத்தம மொரார்ஜி அவர்களின் மூலமாக மேற்படி நன்கொடை கிடைத்திருக்கிறது. ஸ்ரீ நரோத்தம் அவர்களுக்கும் ஸிந்தியா கம்பெனிக்கும் தமிழ் மக்களின் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஆனால் நன்றி செலுத்துவதோடு நமது கடமை—தமிழ் மக்களின் கடமை—முடிந்து போய் விடவில்லை. வ. உ. சி. நிதி ஒரு லட்சம் ரூபாய் ஆவதற்குப் பாக்கியுள்ள எழுபதாயிரம் ரூபாயையும் வசூலித்துப் பூர்த்தி செய்யவேண்டிய கடமை பாக்கி இருக்கிறது. அதைக் கூடிய சீக்கிரத்தில் நிறைவேற்றியாக வேண்டும்.

மேற்படி நிதியின் முக்கியத்தை வெளி நாட்டிலுள்ள தமிழர்கள் எவ்வளவு தூரம் உணர்ந்திருக்கிறார்கள் என்பதை நன்கு எடுத்துக் காட்டும் கடிதம் ஒன்று சமீபத்தில் நமக்குக் கிடைத்தது. பர்மாவைச் சேர்ந்த சக்கரக்கி என்னும் ஊரிலிருந்து ஸ்ரீ நாக. இ. ராமநாதன் செட்டியார் எழுதி யிருப்பதைக் கேளுங்கள் :—

“நமது வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் ஆரம்பித்த மரக்கல நிலயம் இன்று இருந்திருந்தால், யுத்தம் முடிந்து தினங்கள் பல கடந்தும் இதுகாறும் நாங்கள் தாய் பிள்ளை மனைவி சுற்றத்தார் நண்பர்களைக் காணத் தாய் நாட்டுக்கு வர முடியாமல் தவிக்க நேர்ந்திராது. தமிழ் நாட்டுக் கப்பல்கள் தயங்காது வந்து எங்களை ஏற்றிச் சென்று எங்கள் விருப்பம் நிறைவேறச் செய்திருக்கும். அப்படிப்பட்ட பெரியாரின் ஞாபக நிதிக்கு நாங்கள் மிகப் பொருள் அனுப்ப முடியாமைக்கு வருந்தி மேலே கண்ட சிறிய தொகை அனுப்பி யிருப்பதை அன்புடன் பெற்றுக் கொள்ள வேணுமாய்க் கோருகிறோம்.”

மேற்கண்ட கடிதம் எழுதிய நண்பர் அப்படி ஒன்றும் சிறிய தொகை அனுப்ப வில்லை. ரூ. 406 அனுப்பி யுள்ளார். அவரைப்போல் 200 தமிழர்கள் முயற்சி எடுத்துப் பணம் வசூலித்து அனுப்பினால் இலட்சியத் தொகை சேர்ந்து விடுமல்லவா?

## வசூல் விவரம்

| | | | |
|---|---|---|---|
| சர். கே. வி. எஸ். ஆர். எம். அருணாசலச் செட்டியார், சென்னை | ரூ. 5001 | 0 | 0 |
| ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி, பம்பாய் | ரூ. 2500 | 0 | 0 |
| ஸ்ரீ நாக. இராமநாதன் செட்டியார், சக்கரக்கி (வசூல்) | 406 | 0 | 0 |
| ஸ்ரீ என். சீனிவாச ரெட்டியார், முனிசிபல் சேர்மன், சிதம்பரம் | 100 | 0 | 0 |
| ஸ்ரீ சி. எஸ். நடராஜ அய்யர், எம். ஏ., பி. எல்., கடலூர் என். டி. | 50 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். எஸ். ராமசாமி படையாச்சி, புரொப்ரைட்டர், முத்தையா டாக்கீஸ், கடலூர் என். டி. | 50 | 0 | 0 |

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ எஸ். வி. கிருஷ்ணசாமி பாகவதர், தஞ்சாவூர் | 50 | 0 | 0 |
| மெஸர்ஸ் சாரதி அண்டு கம்பெனி, உசிலம்பட்டி | 25 | 0 | 0 |
| மெஸர்ஸ் ஏ. முருகேச முதலியார், எம். முனுசாமி செட்டியார், கதர் ஸ்டோர்ஸ், திருப்பூர் | 25 | 0 | 0 |
| ஸ்ரீ டி. திருநாவுக்கரசு, சக்லாலா, பஞ்சாப் | 20 | 0 | 0 |
| சேலம் ஹோட்டல் தொழிலாளர் சங்கம், செரி ரோடு, சேலம் | 15 | 6 | 0 |
| வ. உ. சிதம்பரனார் இளைஞர் கழகம், வடசேரி, நாகர்கோவில் | 15 | 0 | 0 |
| ஸ்ரீமதி கே. தெய்வானை, அம்பர் இல்லம், தேமத்தான்பட்டி | 10 | 0 | 0 |
| ஹிந்துஸ்தான் விமானத் தொழிற்சாலை நண்பர்கள், பெங்களூர் (ஸ்ரீமான்கள் திருநாவுக்கரசு, மேனன், ஐயங்கார், கேசவராவ், சந்திரசேன், தெல்லிப்பள்ளி ராமகிருஷ்ணன், கோதண்டராம், ராஜகோபால், கனகட்டி கிருஷ்ணமூர்த்தி, சேஷன், அச்சுதன்) | 10 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி எம். ஏ., மச்சிகோடா, ஹைதராபாத் | 5 | 0 | 0 |
| ஸ்ரீமதி எம். எஸ். கமலா, ஆனந்த மந்திரம், ஹரிஹர் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ வி. கேசவன், ஹவில்தார் கிளார்க் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ ஏ. டி. ராவ், ஜெனரல் மர்ச்சண்ட், சிலோன் | 5 | 0 | 0 |
| ஸ்ரீ எஸ். வேலு, ஒட்டன்சத்திரம் | 5 | 0 | 0 |
| காசியததீபி, தேசிய வாலிபர் சங்கம், விட்டலபுரம் | 5 | 0 | 0 |
| நாமகள் இலக்கிய சங்கம், தெப்பக்குளம், திருச்சி | 3 | 2 | 0 |
| ஸ்ரீ பி. சுப்பையா, கொழும்பு, சிலோன் | 3 | 0 | 0 |
| ஸ்ரீ வி.எஸ். சரவணம், உபாத்தியாயர், எழும்பூர் | 2 | 7 | 0 |
| ஸ்ரீ என். நீலகண்டன், ஜனுவரம் இலக்கிய சங்கம், பெரம்பூர் | 2 | 0 | 0 |
| ஸ்ரீமதி சரதாபாய் சுப்ரமண்யம், போதனூர் | 2 | 0 | 0 |
| ஸ்ரீ ஜி. கே. ராஜேந்திரன், கோபிச்செட்டிபாளையம் | 1 | 0 | 0 |
| ஸ்ரீ கே. என். சங்கரன், தல்லாகுளம், மதுரை | 1 | 0 | 0 |
| ஸ்ரீ இ. இராஜரத்தினம், தேசிய வாலிபர் சங்கம், கோபி | 0 | 10 | 0 |
| ஸ்ரீ காக. கிருஷ்ணமூர்த்தி, சித்தூர் | 0 | 8 | 0 |
| முன் வரவு ரூ. | 4650 | 0 | 3 |
| ஆகமொத்தம் ரூ. | 12,973 | 1 | 3 |

[மேற்படி வ. உ. சி. ஞாபகார்த்த நிதிக் கமிட்டிக்கு சேரிஸ் வந்த தொகையையும் சேர்த்து இதுவரை மொத்தம் ரூ. 30,000த்துக்கு மேல் சேர்ந்திருக்கிறது.]

[1945-ம் வருஷத்துக் "கல்கி" சிறு கதைப் போட்டிக்கு வந்த கதைகளில் இது ஒன்று. "ரதி" என்று புனைபெயர் கொண்ட ஸ்ரீமதி லக்ஷ்மி தேவி எழுதியது. "ரதி" என்னும் புனைபெயர் மற்றொரு பிரபல தமிழ் எழுத்தாளருக்குரியது என்று தெரிவதால், இந்தக் கதையை எழுதியவரின் சொந்தப் பெயருடன் வெளியிடுகிறோம்.]

# சிதைந்தது எது?

## எம். லக்ஷ்மி தேவி

வாசல் திண்ணையில் உட்கார்ந்து வெள்ளை வெளேரென்று சுண்ணாம்பு அடித்துப் பச்சைப் பசேலென்று மெழுகியிருந்த எதிர் வீட்டை நோக்கிப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தாள் பொன்னி.

மார்கழி மாதம். தைப் பொங்கலுக்கு இன்னும் ஆறே ஆறு நாட்கள் தான் இருந்தன. பொன்னியின் வீட்டைத் தவிர, மற்ற எல்லாக் குடியானவர் வீடுகளிலும் புது நெல்லும், கரும்பும், மஞ்சள் குலைகளும் வந்து நிறைந்திருந்தன. பொங்கல் புதுநாளை வரவேற்க அந்தக் கிராமமே புது உற்சாகத்துடன் இருந்தது.

இடுப்பில் குழந்தையுடன் வெற்றிலையை மென்று கொண்டே எதிர் வீட்டிலிருந்து வந்த இராமாத்தாள், "பொன்னி! என் குந்திக்கிட்டிருக்கே? வீடு பூசல்லே? பொங்கல் இன்னும் ஆறே நாள்தானே இருக்குது?" என்று கேட்டாள்.

"இருந்தாத் தொலையுது, நாளைக்குப் பூசினாப் போவுது!—அது சரி, கவுண்டரை எங்கே காணோம்? டவுனுக்குப் போயிருக்குதா, எதாச்சும் புதுச் சீலை கீலை வாங்க?"

"இல்லே, வயலிலே தான் இருக்குது. நாளைக்குப் போரும் டவுனுக்கு. பெரிய புள்ளே தாவணி வேணும்னு நச்சரிக்கக் கிட்டே கிடக்குது. அதுக்கு ரெண்டு தாவணி; பையனுக்கு ரெண்டு சட்டை; இந்தக் குழந்தைக்கு ரெண்டு உடுப்பு; அப்புறம் எனக்கு ரெண்டு சீலை; தனக்கு ரெண்டு வேட்டி வாங்கிப்பாங்க. என்ன பொன்னி, செலவைப் பார்த்தயா?"

"பின்னே, பொங்கல் சும்மாத்தானு?"



"அது சரி, நாளைக்கு நீயும் வாயேன்!"

"நானென்னத்துக்கு? நான் கெடக்கிற கெடப்புக்குப் பொங்கல் வேறேயா?"

"அவன் கெடக்கிறான், அறிவு கெட்ட பயல்! அவனுக்குப் புத்தி கித்தி இருந்தாத் தெரியும். ஒரு பொம்பளையெ, அதுவும் நிறை மாசத்திலே விட்டுட்டுப் போறோமே, என்ன செய்வா, அவளுக்கு யாரு ஆதா வுன்னு யோசிச்சானு, பாவி! அவன் ஒரு ஆம்பிள்ளையா?"

"இந்தப் பொங்கலுக்கு ரெண்டு வருச மாச்சு. எங்கிருக்காங்களோ, என்னமோ!"

"அவனைப் பத்தி நீ ஏன் கவலைப்படறே? அவன் உன்னைப் பத்தி நினைச்சாத் தானே? — உம், வேலையைப் பாரு!"

இந்தச் சமயத்தில் எதிர் வீட்டு வாசலில் ஒரு கட்டை வண்டி வந்து நின்றது. அந்த வண்டி நிறைய நெல் மூட்டைகள் அடுக்கப் பட்டிருந்தன. அதைக் கண்டதும் இராமாத்தாள் குழந்தையை எடுத்துக் கொண்டு பரபரப்புடன் ஓடினாள்.

நாலைந்து பேர்கள் ஒவ்வொரு மூட்டையாக எல்லா மூட்டைகளையும் வீடு சேர்த்தார்கள். மறுபடியும் இன்னொரு வண்டி வந்து நின்றது. அதன் மூட்டைகளெல்லாம் காலியானதும் இரண்டு வண்டிகளையும் வேலையாட்கள் ஓட்டிக் கொண்டு போய் விட்டார்கள்.

பொன்னி இவைகளையெல்லாம் இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டு இருந்தாள். வண்டியுடன் வந்த நான்கு பேர்களில் ஒருவன் அவள் கணவனின் ஒன்று விட்ட அத்தை மகன். தன்னை விட்டு ஓடிப் போன தன்

கணவனின் கதியைப் பற்றி அவளைக் கேட்கலாமென்று நினைத்தாள் பொன்னி. அவன் தன்னைப் பார்த்தும் பார்க்காதது போல் பேசாமல் போனது அவள் மனத்தில் சுருக் கென்று தைத்தது. அதுவுமல்லாமல் ஊராரின் வெறுப்புக்குத் தன் கணவன் இலக்காக இருக்கிறான் என்பதை இராமாத்தாளின் சொற்களால் உணர்ந்தாள் பொன்னி. அவள் தன்னையே கேட்டுக் கொண்டாள், 'குற்றவாளி யார்?' என்று. அப்பொழுது சின்ன முத்துவின் உருவம் புன்முறுவலுடன் அவள் மனக் கண்முன் தோன்றிற்று.

## 2

சின்னமுத்து தாய் தந்தையற்ற பையன். அவ்வூர் பெரியக் கவுண்டர் அவனை ஆதரித்துத் தம் வயலிலேயே அவனுக்கு வேலையும் கொடுத்தார். அவன் மிகவும் யோக்கியன், கபட மறியாதவன், உண்மையானவன். ஒரு நாள் வயலில் பொன்னியைத் திடீரெனச் சந்தித்து அவளிடம் மிக்க அன்பு கொண்டான். பொன்னி சிறு வயதிலிருந்தே மகா பிடிவாதக்காரி. அவள் வைத்ததுதான் சட்டம். தவிர, யாருக்கும் பணிய மாட்டாள். மகா கோபக்காரி. பொன்னியும் அவனை மணக்கச் சம்மதித்தாள். இருவருக்கும் கல்யாணம் இனிது நடந்தேறியது.



ஆனாலும் பொன்னியின் பெற்றோர் சின்ன முத்துவை அனாதை என்று கேவலமாகவே நடத்தினார்கள். பொன்னிக்கு இது பிடிக்கவில்லை. அதுவுமல்லாமல் அவர்கள் கல்யாணத்தின்போது பொன்னிக்கு எட்டுப் பவுனில் சங்கிலி செய்து போடுவதாகக் கூறி, பிறகு ஏமாற்றி விட்டார்கள். மாப்பிள்ளை பணக்காரனாகவோ, அல்லது உற்றார் உறவினர் உடையவனாகவோ இருந்திருந்தால் அவர்கள் அப்படி ஏமாற்றியிருக்க முடியுமா?

இதனாலெல்லாம் பொன்னி வெறுப்பும், வியாகூலமும் அடைந்தாள். அவள் தன் கணவனுடன் பிறந்த வீட்டை விட்டு வரும் பொழுது, "கணவன் சம்பாத்தியத்தில் பத்துப் பவுனுக்குக் குறையாமல் சங்கிலி பண்ணிக் கழுத்தில் போட்டுக் கொள்ளாமல் இவ் வீட்டு வாசலை மிதிக்க மாட்டேன்" என்று மனத்தில் பிரதிக்ஞை செய்து கொண்டாள்.

ஐந்து வருஷங்கள் வரை பொன்னியின் இல்லற வாழ்க்கை இன்பமாகவே கழிந்தது. சின்ன முத்துவுக்குக் கல்யாணமானதும் பெரியக் கவுண்டர் தம் வயலை அவனுக்கே உழும்படி குத்தகைக்கு விட்டு விட்டார். அதோடு ஒரு சின்ன வீடும் அளித்தார்.

சின்னமுத்து நல்ல உழைப்பாளி. அவன் தன்னுடைய உழைப்பின் பலனைக் கொண்டே தான் உழுதுகொண்டிருந்த நிலத்தைச் சொந்தமாக வாங்குவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்து வந்தான். தகுந்த பணமும் கைக்குக் கிட்டியது. பெரியக் கவுண்டரைக் கேட்க வேண்டியதுதான் பாக்கி.

அப்பொழுது பொன்னி கருவுற்றிருந்தாள். பச்சை மண்ணை மனிதனுக்கும் மகத்தான பதவிக்கு அதிகாரியாக இருக்கும் பெருமை அவள் முகத்தில் பிரதிபலித்தது. வெகு சீக்கிரத்திலேயே தனக்குக் கிடைக்கப் போகும் 'தாய்' என்னும் உன்னத பீடத்தைப் பற்றி

யும், அதனால் சமூகத்தில் தான் பெறப் போகும் மதிப்பு, செல்வாக்கு இவற்றைப் பற்றியும் அவன் எண்ணி எண்ணி மனம் பூரித்தான்.

இப்பொழுதெல்லாம் சின்ன முத்து பொன்னியைத் தண்ணீர் கொண்டு வருவதற்குக்கூட விடுவதில்லை. தானே கொண்டு வந்து விடுவான். தன்னால் அடைய முடியாத அரும் பெரும் செல்வம் ஏதோ அதிர்ஷ்ட வசமாகத் தனக்குக் கிடைத்து விட்டதாகப் பெருமையடைந்தான் சின்னமுத்து.

3

பொன்னி தான் செய்த சபதத்தை மறக்கவில்லை. ஏழாவது மாதம் பிறந்தவுடனே தன்னை அழைத்துக் கொண்டு போக பெற்றோர் வருவார்கள், அதற்குள் புத்தம் புதுச் சங்கிலி கழுத்தில் மின்ன, வெற்றிப் புன்னகையுடன் அவர்களுக்குக் காட்சி யளித்து, அவர்களைத் தலைகுனியச் செய்ய வேண்டுமென்று விரும்பினாள் பொன்னி.

ஆகவே, அன்று சின்னமுத்து வயலிலிருந்து வந்ததும், "என்னுங்க, நான் ஒண்ணு கேக்கறேன், வாங்கித் தாரீங்களா?" என்று கேட்டாள் அவள்.

"என்னது?"

"என்னமோ கடவுள் கிருபையிலே இப்போதைக்கு மோடை இல்லாமல் இருக்கு. எங்க ஆத்தா அப்பன் வாரதுக்குள்ளே பத்துப் பவுனிலே ஒரு சங்கிலி செய்து என் கழுத்துக்குப் போடுங்களேன்!"

பொன்னியின் எதிர்பாராத இக் கோரிக்கையினால் சின்ன முத்து ஒரு க்ஷணம் திகைத்து நின்றான். ஆனாலும் அப்போதைக்கு அவளைத் திருப்தி செய்வதற்காக, "அதுக்கென்ன, வாங்கினாப் போச்சு" என்று சொல்லி விட்டு, உடனே பிள்ளையார் கோவிலை நோக்கி நடந்தான்.

அவன் மனம் எண்ணாத எண்ண மெல்லாம் எண்ண ஆரம்பித்து விட்டது. அவன் எந்த நிலத்தைத் தனக்கு உரிமை யாக்கிக் கொள்ள இரவும் பகலும் உழைத்து வந்தானோ — அந்த நிலத்தைப் பழனிக் கவுண்டர் என்பவர் வாங்க முடிவு செய்திருப்பதாக அன்று அவன் கேள்விப்பட்டிருந்தான். அந்த வயலைத் தான் வாங்க நினைப்பதாகப் பெரியக் கவுண்டருக்குத் தெரிந்தால், அவர் அதற்குச் சந்தோஷமாகச் சம்மதிப்பா ரென்பது அவனுக்குத் தெரியும். ஆனாலும் அவரை எப்படி நேரில் கேட்பது? இந்த விஷயத்தில் அவன் என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்த போதுதான் பொன்னி அன்று தன்னுடைய ஆவலை அவனிடம் வெளியிட்டாள். இப்பொழுது பொன்னியின் ஆசையை நிறைவேற்றுவதா? அல்லது, தன் ஆவலைத் தீர்த்துக் கொள்வதா?

எது எப்படியானாலும் முதலில் வயலை வாங்கி விடுவது, பிறகு சிறுகச் சிறுக அதில் வரும் லாபத்தைக் கொண்டு பொன்னிக்குச் சங்கிலி செய்து போடுவது. இந்த முடிவுக்கு வந்தவுடனே அவன் முகம் புன்னகையால் மலர்ந்தது. பிள்ளையாருக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு வீடு திரும்பினான்.

4

சாப்பாட்டை முடித்ததும் பொன்னி மறுபடியும் ஆரம்பித்தாள் சங்கிலியைப்பற்றி. தன் யோசனையைத் தெரிவித்தான் சின்ன முத்து. காலாக்கே சங்கிலி வந்துவிடும் என்றும் ஆகாயத்தில் தாவிக் குதித்துக் கொண்டிருந்த பொன்னியைச் சின்னமுத்துவின் பதில் திகைக்கச் செய்தது.

"கண்ணாலத்திலே அவ்வளவு கேவலப் படுத்தினாங்களே, பத்துப் பவுனுக்கு



"பிசாசு என்று பயப்படாதிங்கோ; எங்கள் வீட்டுக்காரர் நாங்கள் எப்படியாவது வீட்டைக் காலி செய்ய வேண்டும் என்பதற்காக இப்படியெல்லாம் வேஷம் போட்டுக்கொண்டு வந்து பயமுறுத்துகிறார்.'



"கொறையாமல் சங்கிலி செய்து போட்டுக் கிட்டுதான் அவுங்க வாசலே மிதிப்பேன்னு சொல்லிட்டு வந்தேனே, அது என்ன ஆவறது?" என்று பொருமினாள் பொன்னி.

பிறந்ததிலிருந்து அதட்டல், மிரட்டல்களுக்குக் கீழ்ப்படிந்தே வளர்ந்த சின்னமுத்துவுக்கு மாமனார் வீட்டில் தான் மதிக்கப்படாதது அவ்வளவாக வருத்தத்தைத் தரவில்லை. ஆனால் சுயேச்சையாகத் திரிந்து வளர்ந்த பொன்னிக்கு அதைத் தாங்க முடியவில்லை. "அது கெடக்குது! அப்படிப் பிடிவாதம் பிடிச்சா நம்மைப் போலவங்களுக்கு முடியுதா, பொன்னி? நமக்கு எது சவுரியமோ அதைத்தானே செய்யணும்? முதல்லே வயலை வாங்கிடலாம். பொங்கலுக்கு வேண்டிய நெல் வந்து உன் காலடியிலே குவியும். அதை வித்து அப்புறம் எப்படியோ சரி பண்ணி உனக்குச் சங்கிலி பண்ணிப் போட்டறேன்" என்று சொல்லிப் பொன்னியைச் சமாதானப்படுத்தப் பார்த்தான் சின்னமுத்து.

அவன் எதிர்பார்த்தபடி பொன்னி சமாதானமடையவில்லை. சின்னமுத்து, ஓர் உயர்ந்த ஸ்தானத்திலிருந்து தன்னை மென்னியைப் பிடித்துத் திடீரெனத் தள்ளி விட்டதாகவே அவன் பாவித்தான்.

மறுநாள் பொன்னி சமைக்கவே இல்லை; அழுது கொண்டே படுத்திருந்தாள். அவளைக் கவனிக்காமல் வழக்கம் போல் விடியற் காலையிலேயே எழுந்து சின்னமுத்து வயலுக்குப் போனான். அப்பொழுது பெரியக் கவுண்டரும், பழனிக் கவுண்டரும் வயலைப் பார்வை விட்டு விட்டு, வண்டியி லேறிப் போனார்கள். சின்னமுத்து விசாரித்ததில், நேற்று இரவே பெரியக் கவுண்டர், பழனிக் கவுண்டருக்கு வயலை விற்பதாக முடிவு செய்து விட்டாரென்றும், வண்டியில் ரிஜிஸ்டர் ஆபீஸுக்குப் போகிறார்களென்றும் தெரிய வந்தது.

இந்தச் செய்தியைக் கேட்ட மாத்திரத்தில், சின்னமுத்துவின் தலையில் பேரிடி விழுந்தது.

"ஐயோ! பொன்னியினால் கெட்டேதே! இல்லா விட்டால் நேத்தே நான் பேசி முடிச்சிருப்பேனே!" என்று அவன் அங்கலாய்த்துக் கொண்டான். அவனுடைய லட்சியம் சிதைந்து விட்டது. அவனுடைய உழைப்பின் குறிக்கோள் நசுங்கி விட்டது. கவலை தோய்ந்த முகத்தில் நிராசை பிரதிபலிக்க அவன் வீடு வந்து சேர்ந்தான்.

எதையோ பறி கொடுத்தவள் போல் வெறும் வெளியை வெறிச் சென்று பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் பொன்னி. "என் பொன்னி! சோறாக்கலையா?" என்று தன் கவலையை மறைத்துக் கொண்டு கேட்டான் சின்னமுத்து.

"சோறுக்குத்தானே கட்டிக் கொடுத்திருக்கு? புருசன்னு அதட்டலும், மிரட்டலும்தான் பொண்டாட்டி கேட்ட ஒரு சங்கிலி பண்ணித் தர ஒரு புருசனுக்குக் கையாலாவாதுன்னு அவன் ஆம்பிள்ளையா?" என்று தன் ஆத்திரத்தைக் கொட்டினாள் பொன்னி

வயல் தன்னுடைய கையை விட்டுப் போனதிலிருந்தே பொன்னியின் மேல் சிறிது மனத்தாங்கல் அடைந்திருந்த சின்னமுத்துவுக்கு இவ்வார்த்தைகள் மேலும் வெறுப்பை மூட்டின.

அவன் மறுபேச்சுப் பேசாமல் கால்கள் இழுத்துச் சென்ற திசையை நோக்கி நடந்தான்.

அன்று போனவன் போனவன்தான்; ஒரு வருடம் இரண்டாகியும் இன்றுவரை அவனிடமிருந்து ஒரு தகவலும் இல்லை.

5

பொன்னியும் அவன் போன பிறகு தனியே இருப்பதற்கு அஞ்சித் தாய் வீ



| | |
|---|---|
| சராசரம்<br>ஜனார்தனு | HT. 121 |
| ந்த பாலா<br>ஹே ஹரே தயாளா | HT. 122 |
| னது உள்ளமே<br>பிருந்தாவனத்தில் | N. 18253 |
| ங்கும் நிறைந்தாயே<br>அரங்கா — யமுநந்தனு | N. 18254 |
| கிதர கோபாலா<br>உடல் உருக (விருத்தம்) | N. 18255 |
| காற்றினிலே<br>மறைந்த கண்டு | N. 18256 |
| மறவேனே<br>லீலைகள் செய்வானே | N. 18257 |

ஸ்ரீமதி

# எம்.எஸ்.சுப்புலக்ஷ்மி

நடிக்கும்

# மீரா

பாட்டுகள்



## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" ரிகார்டுகள்

எல்லா கிராமபோன் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்., டம் - டம், பம்பாய், மதராஸ், டில்லி, லாகூர்.

# உங்கள் 'மார்க்கு' என்ன?

எஸ்.வி.எஸ்.

[நீங்கள் பரீக்ஷையில் வாங்கின 'மார்க்கு' அல்ல ; தைரியமாகவே படிக்கலாம்.]

செட்டி நாட்டுக்குப் போனீர்களானால் "கரு ருரு! வாங்க" என்பார்கள். நமக்கு ஒன்றும் புரியாது. பிறகு விசாரித்தால் வந்தவர் பெயர் கருப்பண்ணச் செட்டியார் என்றும், அதனுடைய குறுக்கல் விகாரம் 'கரு' என்றும், சொல்வது 'கரு ருரு' என்றும் நமக்குத் தெரியவரும்.

திருவல்லிக்கேணிக்கு ஒருநாள் போய், "தொளசிங்கப் பெருமாள் கோவில் தெரு எது?" என்று விசாரித்தேன். மூன்று பேரைக் கேட்டேன். ஒருவருக்கும் தெரியவில்லை. நாலாவதாக வந்தவர் "டி. பி. கோயில் தெருவைச் சொல்லுகிறீர்களோ? இந்தத் தெருதான், ஸார்! டி. பி. கோயில் தெருவில் இருந்து கொண்டே தொளசிங்கப் பெருமாள் கோயில் தெரு எது என்று விசாரிக்கிறீர்களே!" என்றார்.

இப்பொழுதே எச்சரித்து விடுகிறேன்: மயிலாப்பூரில் தென்கூர் செல்வ விநாயகர் கோயில் தெரு எது என்று விசாரித்தீர்களானால் ஒருவரும் சொல்லமாட்டார்கள். டீ. எஸ். வி. கோயில் தெரு எங்கே யிருக்கிறது என்று விசாரியுங்கள்.

விநாயகப் பெருமான் தம் ஐந்து கரங்களையும், தொந்தியையும், மோதகத்தையும், பெருமை வாகனத்தையும் அந்த மூன்று எழுத்துக்குள்ளே தான் அடக்கிக் கொண்டு தீர வேண்டியதாகப் போய் விட்டது. தென்கூர் செல்வ விநாயகருக்கு அந்தத் தெருவில் அவ்வளவு இடநெருக்கடி!

இப்படிப் பெயர் குறுகல் இன்று நேற்று ஏற்பட்டதல்ல. எங்கள் சமஸ்கிருத வித்யா குருநாதம் சொல்லுவதைக் கேளுங்கள்: ரொம்பக் கெட்டிக்காரர் தசரத சக்கரவர்த்தி. அழகான குழந்தை பிறந்தவுடன் அவருக்கு ஒரே கவலையாகப் போய் விட்டது. இந்தக் குழந்தைக்குப் பெயர் சூடும் விஷயத்தில் சைவ வைஷ்ணவக் கலகங்கள் உண்டாகிவிடுமோ என்று ரொம்பவும் பயந்துபோய் ஒரு தந்திரத்தைக் கையாண்டார். வைஷ்ணவ தெய்வமாகிய நாராயணன் என்கிற பெயரிலிருந்து 'ரா'வை எடுத்துக் கொண்டார்.

சைவ மந்திரமாகிய நமசிவாய என்பதில் இரண்டாவது எழுத்தாகிய 'ம'வை எடுத்து இரண்டையும் சேர்த்துப் பெயரிட்டார்— 'ராம' என்று!"

ஏதோ ராமன் என்பது ஒரு பெயர் என்று நினைத்துக் கொண்டிருந்தீர்கள் அல்லவா?

நான் சிறு பையனாகப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது துரைசாமி அய்யர் பையன் பத்மநாபன் என்னுடன் படித்தான். அவனை டி. பி. என்றுதான் எல்லாரும் கூப்பிடுகிறது. ஆனாலும் அவனுக்கு அதைக் கேட்டதும் பிரமாதக் கோபம் வரும்; அவனை தண்டபிண்டம் என்று அழைக்கிறோம் என்பதாக. உண்மையாக அவன் பெயரைக் கூப்பிட்டால் கூடத் தப்பாகப் படுகிறது!

அதனால் அந்தக் காலத்தில் நாங்கள் ரொம்ப யோக்கியர்களாக இருந்தோம் என்று சொல்ல வரவில்லை. ஜெயராமபுரம் ஆராவமுத அய்யங்கார் குமாரர் ரங்கசாமி அய்யங்கார் கருகரு என்று குறுக்கில் வளர்ந்திருப்பார். சின்ன மாங்காய் அளவு இருக்கும் அவருடைய தலை எங்கள் உபாத்தியாயர் அவர். எங்கள் நோட் புஸ்தகங்களைத் திருத்தி விட்டு ஜே.ஏ.ஆர். என்று கையெழுத்துப் போடுவார்— இங்கிலீஷில். இந்த மூன்று எழுத்துக்களையும் சேர்த்துப் படித்தால் ஜார் என்று ஆகும். ஜார் என்றால் ஜாடி! அவர் உருவமும் ஜாடி போல இருந்தபடியால் நாங்கள் அவரை 'ஜாடி' என்று தான் அழைப்போம். எல்லாம் அந்த ஜே. ஏ. ஆரால் வந்த வினைதான்!

இப்படி இங்கிலீஷ் குறிக்கோள் பள்ளிக்கூடத்தில் மட்டும் என்று நினைக்கிறீர்கள்? இல்லவே இல்லை!

நம் சாமர்த்தியத்தை யெல்லாம் மிஞ்சி விட்டான் நேற்று எங்கள் வீட்டுச் சலவைத்

தொழிலாளி. அவன் எனக்குக் கொடுக்க வேண்டிய துணிகளில் ஒன்று பாக்கியிருந்தது. "என்னப்பா, ஒரு துணி காணவில்லையே!" என்றேன்.

"ஆமாம் ஸார்! உங்கள் கே. பி. 'அப்பர் ஷொத்' இன்னும் வரவில்லை!" என்றான்.

அப்பர் ஷொத் என்றால், அங்கவஸ்திரத்தைக் குறிப்பிடுகிறான் என்பது தெரிந்தது. ஆனால் அதற்கு முன்னால் இரண்டு எழுத்துச் சொன்னானே கே. பி. என்று; அது என்ன?

எப்படி யெல்லாமோ யோசனை பண்ணிப் பார்த்தேன்; தோன்றவில்லை. அவனையே கேட்டு விடுகிறது என்று தீர்மானித்தேன். அவன் ஒன்றும் அதிசயமோ, வியப்போ இல்லாமல் "அதுதான், ஸார், கறுப்பு பார்டர் அப்பர் ஷொத்" என்றான்.

பார்த்தீர்களா, இங்கிலீஷும் தமிழும் எப்படி சர்வ சாதாரணமாக—ஒரே பாஷையாகப் போய்விட்டது! தமிழ் கறுப்புக்கு இங்கிலீஷ் 'கே' யாம்!

அப்படி என் அங்கவஸ்திரத்தை 'கே. பி.' என்று குறிப்பிட்டுப் பெருமைப் படுத்துகிறவன், நான் போனால் மட்டும் ரொம்பவும் சிறுமைப் படுத்துகிறான். "ஸார், உங்கள் மார்க்கு என்ன?" என்று ஒவ்வொரு முறையும் கேட்கிறான்.

குதிரை மார்க்கு நெருப்புப் பெட்டி, யானை மார்க்குச் சுருட்டு, கத்திரி மார்க்கு மெழுகு வர்த்தி முதலிய கோஷ்டியில் நம்மையும் சேர்த்து விடுகிறானே என்று வருத்தம் ஏற்படுகிறது.

ஆனால் என்னை மட்டும் அப்படிச் சொல்லுகிறான் என்று இல்லை. ரொம்பப் பிரசித்தமான பெரிய பெரிய மனிதர்கள் வந்தாலும் சற்றும் கவலையின்றி 'உங்கள் மார்க்கு என்ன?' என்று கேட்கிறான். மகாத்மா காந்தியே வந்தால்கூட கூசாமல், "உங்கள் மார்க்கு என்ன? எம். கே. ஜி. தானே?" என்று கேட்கத் தயங்கமாட்டான். நாம் எல்லாம் எந்த மூலைக்கு?

# படித்துப் பார்!

## அரசியல்

[எழுதியவர்: பிளேட்டோ; தமிழாக்கியவர்: வெ. சாமிநாத சர்மா; பிரசுரம்: சக்தி காரியாலயம்; ராயப்பேட்டை, சென்னை. விலை: ரூ. 6.]

அரசியல் மிகவும் கரடு முரடானதென்று பலர் சொல்லுகிறார்கள். அரசியல் என்றாலே பொதுவாக எல்லோருக்கும் ஒருவித பயமும் உண்டாகிறது. ஆனால், அம்மாதிரியான பயத்துக்கு இப்போது ஆதாரமே இல்லை. அவர்கள் சொல்லுவதுபோல அரசியல் அவ்வளவு கரடு முரடானதல்ல வென்பது இப்போது சந்தேகமறத் தெளிவாக விளங்குகிறது. அரசியல் மிக்க மெதுவானது! அதைத் தலைக்குக் கூட வைத்துப் படுத்துக் கொள்ளலாம் என்றால் அது எல்லோருக்கும் அதிசயமாகவே இருக்கும். ஆனால், கண்ணுக்கு முன்னாலே உண்மை தெரியும்போது, அதைப் பார்த்து ஆச்சரியப் பட்டு என்ன பிரயோஜனம்? 'அரசியல்' என்ற இந்த நூலின் அட்டைக்குள்ளே பஞ்சை வைத்துப் பையண்டு செய்திருக்கிறார்கள். கரடு முரடான அரசியலையும் பஞ்சுபோலாக்கித் தமிழர்களுக்கு வழங்கும் சக்தி காரியாலயத்தாரின் தமிழ்த் தொண்டுக்கு என்ன நன்றி சொல்வது? கரடுமுரடான அந்த நூலைத் தெள்ளத் தெளிந்த தமிழிலே எழுதியிருக்கும் ஸ்ரீ சாமிநாத சர்மாவின் இலக்கிய சேவைக்குத்தான் என்ன பதில் சொல்வது—வாங்கிப் படியுங்கள் என்பதைத் தவிர?

கிறிஸ்துநாதர் பிறப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த பிளேட்டோ என்ற இந்த வித்தக ஞானி அரசியலின் பல அம்சங்களைப் பற்றியும் எவ்வளவு தெளிவாகவும், அழகாகவும் சொல்லியிருக்கிறான் என்பதை நினைக்கும்போது அரசியலைப் பற்றி எல்லாம் தெரிந்து விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கும் இன்றைய உலகம் எவ்வளவு வெட்கப்பட வேண்டும்? பிளேட்டோ இரண்டாயிர வருஷத்துக்கு முன்பு எழுதி வைத்து விட்டுப்போன விஷயம் இன்றைய உலகத்துக்கும் எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது! சுதந்திரம் பெற்று சொந்த அரசியலை நடத்தக் கூடிய நிலைமையிலிருக்கும் நமக்கு இந்த 'அரசியல்' என்ற அரிய நூல் மிக்க உதவியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

# ஒரு அவசியமான புதிய இணைப்பு

சுந்தரம் டிரான்ஸ்போர்ட் லிமிடெட்
ஆரம்பிக்கின்றனர்.

# திண்டுக்கல்-வத்தலக்குண்டு

மார்க்கம்

## கால அட்டவணை.

| திண்டுக்கல் | | செம்பட்டி | | | | வத்தலக்குண்டு | |
|---|---|---|---|---|---|---|---|
| பு.ற. | | சேர். | | பு.ற. | | சேர். | |
| காலை | 5-00 | காலை | 5-40 | காலை | 5-45 | காலை | 6-30 |
| காலை | 10-00 | காலை | 10-40 | காலை | 10-45 | காலை | 11-30 |
| மாலை | 2-00 | மாலை | 2-40 | மாலை | 2-45 | மாலை | 3-30 |
| மாலை | 6-15 | மாலை | 6-55 | மாலை | 7-00 | மாலை | 7-45 |

| வத்தலக்குண்டு | | செம்பட்டி | | | | திண்டுக்கல் | |
|---|---|---|---|---|---|---|---|
| பு.ற. | | சேர். | | பு.ற. | | சேர். | |
| காலை | 8-00 | காலை | 8-45 | காலை | 8-50 | காலை | 9-30 |
| பகல் | 12-00 | பகல் | 12-45 | பகல் | 12-50 | பகல் | 1-30 |
| மாலை | 4-15 | மாலை | 5-00 | மாலை | 5-05 | மாலை | 5-45 |
| இரவு | 8-00 | இரவு | 8-45 | இரவு | 8-50 | இரவு | 9-30 |

திண்டுக்கல்லில்
எல்லா நேரங்களிலும் டாக்ஸிகள் கிடைக்கும்

## சுந்தரம் டிரான்ஸ்போர்ட் லிமிடெட்

மதுரை

# வான சஞ்சாரம்

### இசைத் தேவி

ரேடியோ மூலம் தினந்தோறும் எத்தனையோ வகையான கானங்களையும், பேச்சுக்களையும் நாடகங்களையும் கேட்கிறோம். ஆனால் மார்ச்சு 3வ. காலை நடந்த 'அந்த நாளும்' என்ற நாடகத்தைப் போன்ற ஹாஸ்யச் சுவை நிறைந்த நிகழ்ச்சிகளைக் கேட்பது அரிது. அதைத் தயாரித்தவரும், நடிப்பில் பங்கெடுத்துக் கொண்டவரும் ஸ்ரீ சங்கு சுப்ரமணியம் என்றால் கேட்க வேண்டுமா? காலேஜ் படிப்பினால் முதலில் வாழ்வுக்கு உதவாக் கரையான வாஸு கிராமாந்தரப் பெண்ணை மணந்து கிராம வாழ்க்கையி லீடுபடுவதும், பாரிஸ்டர் பரீக்ஷை தேறியும் முதலில் வெண்ணெய் வியாபாரத்தி லீடுபட்ட பாஸ்கரன், நாட்டுப்புறத்தான் ஜகந்நாதனிடம் அதை ஒப்படைத்து வக்கீல் தொழிலுக்குத் திரும்புவதும் கதை. வாஸு-வின் தகப்பனார் தம் வைதீகத்துடன் உலக வாழ்க்கையையும் பணத்தின் மகிமையையும் அறிந்து ஜபம் செய்யும்போதே பேசிய பேச்சுக்களும் சிரிப்பில் குலுங்க வைத்தன. இவை யெல்லாம் 'அந்த நாளும் வந்திடாதோ' என்ற பாட்டுக்குப் பொருத்தமாய் அமைக்கப் பட்டது ருசிகரமா யிருந்தது.

பிப்ரவரி 28வ. திருச்சியில், கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையின் வயலின் கச்சேரி நடந்தது. உசேனி, தோடி, அடாணா, முகாரி, (பல்லவிக்கு) நாட்டக்குறிஞ்சி ராகங்களைப் பொழிந்தார். எடுத்தவுடனேயே ராக ஸ்வரூபத்தின் தெளிவும் உருப்படிகளின் வனப்பும் மனதைக் கவர்ந்தன.

அன்றிரவு சென்னையில் இரவு 8-45க்கு மதுரமான குரலில் தைரியமாயும், உயர்ந்த கற்பனையுடனும் ஒரு கானம் கேட்டது. பேகடா ராகமும், 'அவு நினமு' 'எந்த வேடுகோ' கிருதிகளில் நிரவல் ஸ்வரங்களும் பொழிந்து வந்தன. பல விடங்களில் மதுரை மணியின் வழி பிரதிபலித்தது. வானொலியில் குறிப்பிட்ட பெயரிலிருந்து ஏதோ புதிதாய்க் கிடைத்த கலைவாணி என்று நினைத்தேன். கடைசியில், ''பாடியவர் மீனாக்ஷி ராமகிருஷ்ணன்'' என்று கேட்ட போது வியப்புக்கு இடமில்லாமல் போயிற்று.



ஜி. ஸீதா.

மார்ச் 2வ. சென்னையில் சித்தூர் சுப்ரமணியப் பிள்ளைக்குப் பதிலாக வி. வி. சடகோபன் முழு நேரக் கச்சேரி செய்தார். சாரீர சம்பத்தும் ஞானச் சிறப்பும் அழகு பாணியும் கொண்ட இவர் சங்கீதம் வரவரப் பழுத்துவருகிறதென்பது தெரிந்தது. பிர்க்காப் பொழிவுடன் வளைவு குழைவுகளும் சேர்ந்து பிலஹரி, ஆபோகி, இவை தவிர ஸ்வர பூஷணி என்ற அபூர்வ ராகத்தையும் நன்கு கையாண்டார்.

3வ. இரவு சென்னையில் குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கும் பதிலாகப் பத்தமடை சுந்தரமய்யர் நிகழ்த்திய பாட்டும், திருச்சியில் எம். ஏ. கல்யாணகிருஷ்ண பாகவதரின் வீணையும் இரண்டு உயர்தரக் கச்சேரிகள். முதல்வர் தமக்கு வழக்கமான அழகிய ஒர்க்கை கமகப் பொழிவுடன் கன்னடகௌளை கல்யாணி ராகங்களையும் கிருதிகளையும் வழங்கினார். பின்னவர் மிருதுவான மீட்டுடனும், ஸ்வரூபத் தெளிவுடனும் வாசித்த கரஹரப்ரியா, ஜனரஞ்ஜனி, தோடி ராகங்கள் வனப்பா யிருந்தன.

26வ. சென்னையில் டி. நடராஜன் தமது நடுத்தர சாரீரத்தில் ஞானபாவமாய் லதாங்கி, ஸஹானா, தோடி ராகங்களைத் திறம்படப் பாடினார்.

27வ. திருச்சியில் எம். ஏ. பார்வதி இனிய குரலில் நல்ல தேர்ச்சியுடன் வழங்கிய பிலஹரி, மாயாமாளவகௌளை, தோடி ராகங்களும் உருப்படிகளும் தேர்ந்தியா யிருந்தன

28வ. சென்னையில் பாடிய ஜி. ஸீதாவுக்கு மதுரமான குரல். சுத்த தன்யாசி, காம்போதி ராகங்களும், 'தம்மமிகிதலவேய' 'மரகதவல்லி' கிருதிகளும் நல் வடிவங்களா யிலங்கின. அன்று அதே நிலையத்தில் டி. கே. ஜயராமன் நய சாரீரத்தில் பிருகாய் சங்கராபரண ராகத்தையும் ஒரு ராகமாலிகையும் சக்கை போடு போட்டார்.

எம். நீலகண்டய்யர் நிதானமும், நல்வழியும் கொண்டு கல்யாணி ராகத்தையும் 'ஏமாந்திவா-தே' கிருதியில் நிரவல் ஸ்வரங்களையும் அழகு படப் பாடினார்.

மார்ச்சு 4வ. காலை மங்களகரமாய், தர்மபுரம் எஸ். அபிராமசுந்தரம் பிள்ளை வாசித்த நாகஸ்வர சங்கீதம் மனோஹரமா யிருந்தது. தோடி, ஆரபி, சாமா ராகங்களோடு 'மத்யமாரவளி' என்று குறிப்பிட்ட அசாதாரண ராகமும் கவர்ச்சியாய்க் கொண்டிலங்கியது. ஸூக்ஷ்மமாய்க் கவனித்தால் கரஹரப்ரியா சாயையாய்த் தோன்றியிருக்கும்.

---

**மகிழ்கிறோம்!**

24—2—46 கல்கி இதழின் மேலட்டைப் படமான மாயவரம் அன்னை கன்றுயிரா மைவலக் காட்சியில் காணப்படும் அன்னையின் படத்தைத் தீட்டிய ஓவியர் மாயவரம் ஸ்ரீ கே. நடராஜன் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

யுத்தம் ஆரம்பமானவுடன், தேசாபிமானமுள்ள ஆண் பெண்களைப்போல டீயும் போருக்கு ஆயத்தமானது.

எல்லா முனைகளிலும் டீ போர்புரிந்தது. தரை, கடல், ஆகாயப்படைகள் எங்கு சென்றாலும் அவைகளோடு சென்றது. காயமடைந்தோரை காப்பாற்றுவதிலும், வியாதியுள்ளவர்களை சம்ரக்ஷிப்பதிலும், ஊக்கமிழந்தவர்களை உற்சாகப்படுத்துவதிலும் டீ தன் வேலையைச்செய்தது. பாலைவனங்களிலும் காடுகளிலும், பனியுறைந்த வடதுருவத்திலும், கடும் உஷ்ணப்பிரதேசங்களிலும், போர் புரியும் வீரர்களுக்கு டீ உற்சாகமளிக்கும் தன் சேவையைப் புரிந்தது.



ஐரோப்பிய விஜயத்தைக் கொண்டாடும்போதும் "உற்சாகமளிக்கும் கப்" முன்னணியில் நின்றது. உலக மகாயுத்தம் ஒழிந்ததைக் குறித்து மற்றுமொரு முறை வெற்றிநாளைக் கொண்டாடும் தினம் விரைவிலேயே வந்தது. அன்றைய மகிழ்ச்சியை மிகைப்படுத்த டீ தயாராக நின்றது.



போர்க்கோலத்தை டீ இன்னமும் தரித்திருந்தாலும், சமாதான காலத்தின் சாதாரண வாழ்க்கைக்குத் திரும்பும் பணியிலும் பங்கெடுத்து வருகிறது. இல்லற வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருளாகத்திகழும் அந்நாளை எதிர்நோக்கி நிற்கிறது டீ. டீயை அனுபவித்து அருந்தும் அந்நாளை அடைய நீங்களும் முனைந்து செய்யுங்கள்.





சமாதான காலத்திலும் யுத்தகாலத்திலும்



டீயை நம்புங்கள்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

IK 253 - TM



# இந்தியத் தேயிலையில்

# மிகச்சிறந்தது

மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள




லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.

# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 84

# HARDAYAL

பழைய நாட் குடும்பம். வியாபாரத்திற் கியாதி பெற்ற குடும்பம். சிறப்பாகத் தென் இந்தியாவிலும் பொதுவாக வெளியிலும் கடந்த ஐம்பத்தைந்து வருடங்களாக செல்லாராம் கியான்சந்ட் அல்லது செல்லாராம்ஸ் என்று வழங்கிய குடும்பத்தின் வழித்தோன்றல் இப்போது தனித்தொழில் செய்ய வந்திருக்கின்றார்.

## ஹரிதயாள்

என்னும் பெயருடன் இந்தப் புது வியாபாரத் தொழில் 1946-ம் ஆண்டு, பெப்ரவரி மாதம் 14-ந் தேதி வியாழக்கிழமை. பொது ஜனங்களுக்கு நன்ரு யறிமுகமானதும் இதுவரை "பாஷன் சில்க் பாலெஸ்" எனப் பெயருள்ளதுமான அந்த கடை, அதாவது

## சென்னை, ராட்டன் பஜார் 45-வது

இலக்கக் கட்டிடத்தில் தொடங்கியது. வியாபாரத் துறையிலும் வாடிக்கையாளர்களிடத்திலும் பலவருடங்களாக நேரடியாக நன்கு பழக்கமுள்ளவராகிய ஹரிதயாள் என்பவர் இந்தப் புது ஸ்தாபனத்தின் மூத்த பாகஸ்தர். இவருடைய நேரடியான பழக்கம், தொழிலில் புத்தம்புதிய முறைகளை யனுசரித்தல், வியாபாரத்துக்கு முதல்தரமான சரக்குகளைத் தருவித்தல், பழைய ஸ்தாபகர்கள் வகுத்த நேர்மையான வியாபார விதிகளை அடிப்படையாகக் கொள்ளல்—ஆகிய இத்திட்டங்களின் பயனாக வாடிக்கையாளர்கள் மிகவும் விரும்பக்கூடிய தொன்று உருவாகின்றது.

ஆகலால் இப்புது ஸ்தாபனம் பொது ஜனங்களிடம் வேண்டிக்கொள்வதாவது அவர்கள் வாடிக்கையை இந்த ஷாப்பில் வைத்துக் கொள்ள வேண்டுமென்பதே.

**ஹரிதயாள்**

டெலிபோன்: 3723

தந்தி: PALACE

**HARDAYAL**

45, ராட்டன் பஜார்

— மதராஸ் —

H. 1

# "அண்ணனைக்... ...கொன்றேன்"



சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

யுத்தத்தில் இறந்தவர்களுடைய ஆத்ம சாந்திக்காக எள்ளும் தண்ணீரும் விட்டு விட்டு கங்கைக் கரையில் பாண்டவர்கள் ஒரு மாதம் தங்கினார்கள்.

* * *

ஒரு நாள் நாரதர் வந்து "தரும புத்திரனே! கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தினாலும் அருச்சுனனுடைய பலத்தினாலும் உன்னுடைய தருமத்தின் பலத்தாலும் வெற்றி பெற்றாய். பூமி முழுவதும் உனதாயிற்று. சந்தோஷம் அடைந்தாயா?" என்றார்.

"பகவானே! பூமி எனதாயிற்று என்பது உண்மை. ஆனால் சுற்றத்தார் மாண்டார்கள். பிரியமான குமாரர்களைப் பலி கொடுத்தோம். இந்த வெற்றி பெரிய அபஜயமாகவே எனக்குத் தோன்றுகிறது. நாரதரே! மாறுபடாத வீரமும் உலகம் வியக்கும் படியான சாமர்த்தியமும் படைத்திருந்த எங்களுடைய தமையன் கர்ணனைப் பகைவன் என்று கருதி கொன்று விட்டோம். ராஜ்யத்தில் ஆசை வைத்து இந்தப் பெரிய பாவத்தைச் செய்து விட்டோம். அவனோ தாயாருக்குத் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி எங்களைக் கொல்லாமலே விட்டான். இத்தகைய தமையனைக் கொலைசெய்த நீசனான என்னுடைய மனம் மிகவும் தவிக்கிறது. கர்ணனுடைய பாதங்கள் எங்கள் தாயார் குந்தியினுடைய பாதங்களைப் போலவே இருந்தன. சபையில் எங்களை அவன் அவமதித்த போது எனக்கு உண்டான கோபம் அவன் கால்களைக் கண்டதும் எப்படியோ தணிந்து விட்டது. இது எனக்கு இப்போது நினைவு வருகிறது."

இவ்வாறு சொல்லி யுதிஷ்டிரன் பெருமூச்சு விட்டு மிகவும் துக்கப் பட்டான். இதன்பின் நாரதர் கர்ணனுடைய சரித்திரத்தை யெல்லாம் எடுத்துச் சொல்லி அவனுக்கு ஏற்பட்ட சாபங்களையும் எடுத்துச் சொன்னார்.

அருச்சுனன் தன்னைவிட தனுர்வேதத்தில் சிறந்தவன் என்று கர்ணன் தெரிந்து கொண்டு துரோணரை அடைந்து தனக்குப் பிரம்மாஸ்திரத்தை உபதேசித்துத் தரும்படி கேட்டான். அவர் அது தன்னால் முடியாது. ஒழுக்கம் தவறாத பிராம்மணன் அல்லது கடின தவம் புரிந்து சுத்தமடைந்த க்ஷத்திரியன் இவருமே தான் அதை அடைய முடியும் என்று சொல்லி விட்டார். பிறகு கர்ணன் மகேந்திரமலைக்குச் சென்று பரசுராமனை ஏமாற்றித் தான் பிராம்மணன் என்று சொல்லி அவரிடம் சீடனாக அமர்ந்து தனுர்வேதமும் அஸ்திரங்களும் கற்றுக் கொண்டான்.

ஒரு நாள் அந்த ஆசிரமத்துக்குச் சமீபத்தில் ஒரு பிராம்மணனுடைய பசு கர்ணன் தனியாக வில்பயிற்சி செய்து கொண்டிருந்த சமயம் தற்செயலாக அடிபட்டு இறந்து விட்டது. பசுவுக்கு உடைய

ராகிய பிராமணர் கோபமுற்று "யுத்தத்தில் உன் தேர்ச் சக்கரம் மண்ணில் பதிந்து போகும். அப்போது இந்தப் பசுவைப் போல் நீயும் கொல்லப்படுவாய்" என்று சொல்லிச் சபித்து விட்டார்.

பரசுராமர் கர்ணனிடம் மிக்க அன்பு கொண்டு பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்கும் முறையையும் நிவர்த்திக்கும் முறையையும் உபதேசித்தார். ஒரு நாள் அவர் இந்த மாணவன் பிராமணன் அல்ல என்று கண்டு கொண்டு விட்டார். கர்ணனுடைய தைரியமும் சகிப்பு வன்மையுமே இதைக் காட்டிவிட்டது. ஒரு புழு கர்ணனுடைய துடையைக் கடித்துத் துளைத்துக் கொண்டிருந்தும் வெகு நேரம் அதைப் பொறுத்துக் கொண்டு கொஞ்சமும் அசையாமல் தன் துடைமேல் தலை வைத்துத் தூங்கிக் கொண்டிருந்த பரசுராமரை எழுப்பாமல் இருந்தான். பிறகு ரத்தம் ஓடிப் பெருகி அவரை எழுப்பிற்று. பரசுராமர் எழுந்து கர்ணனைப் பார்த்து, "மூடனே! இத்தகைய சகிப்புத் திறமை க்ஷத்திரியன் தான் படைத்திருப்பான். உண்மையைச் சொல். நீ பிராமணன் அல்ல. என்னை ஏமாற்றி விட்டாய். என்னிடம் நீ கற்றுக் கொண்ட வித்தை மரண காலத்தில் உன் நினைவுக்கு வராது" என்று சபித்து விட்டார். பரசுராமருக்கு க்ஷத்திரியர்கள் மேல் மிகுந்த ஆத்திரம் அல்லவா?




கர்ணன் மகா கொடையாளி. ஒரு நாள் பிராம்மண வேஷம் பூண்டு வந்த தேவேந்திரனால் யாசிக்கப்பட்டுத் தன் குண்டலங்களையும் கவசத்தையும் கர்ணன் கழற்றிக் கொடுத்து விட்டான். தெய்வீக சக்தி பொருந்திய குண்டலங்களையும் உடன் பிறந்த கவசத்தையும் கொடுத்து விட்ட பிறகு கர்ணன் பலவீனமடைந்தான்.

"குந்திக்குக் கர்ணன் தந்த வரத்தினாலும் பரசுராமருடைய சாபத்தாலும் பசுவை இழந்த பிராமணனுடைய கோபத்தாலும் பீஷ்மர் மகாரதர்களில் இவனைக் கணக்கிடாமல் அவமானப் படுத்தியதாலும் தேரை ஓட்டிய சல்லியன் செய்த இகழ்ச்சியின் பயனாகவும் வாசுதேவருடைய யுக்தி முறைகளினாலும் கர்ணன் இறந்தான். இவ்வாறு பல காரணங்கள் ஒன்று கூடிக் கர்ணன் மரணமடைந்ததற்கு ஏதுவாகின்றன. நீதான் அதற்குக் காரணம் என்று நினைத்துத் துக்கிக்க வேண்டாம்" என்றார் நாரதர்.

யுதிஷ்டிரன் நாரதரின் சொற்களால் ஆறுதல் அடையவில்லை.

குந்திதேவி சொல்லலானாள். "கர்ணனைக் குறித்து நீ சோகப்படாதே! கெட்ட புத்தியுள்ள துரியோதனனை விட்டுவிட்டு உன் பட்சம் வந்து சேரும்படி அவன் தகப்பனான சூரிய பகவானே முயன்றான். நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவன் கேட்கவில்லை. அவன் முடிவுக்கு அவனே காரணம்" என்றாள்.

"கர்ணன் பிறப்பின் ரகசியத்தை மூடி வைத்து எங்களை நீ வஞ்சித்து விட்டாய். அதனால் எங்களுடைய பெரும் துக்கத்துக்கு நீ காரணமானாய். இன்று முதல் பெண்கள் ரகசியத்தைக் காப்பாற்றச் சக்தியற்றவர்களாகட்டும்!" என்று யுதிஷ்டிரன் அண்ணனைக் கொன்றோமே என்ற வருத்தத்தில் சாபமிட்டதாகப் பௌராணிகர் ஒரு கதை கற்பித்துச் சொல்லுகிறார்.

பெண்கள் ரகசியத்தைக் காப்பாற்ற மாட்டார்கள் என்பது உலக அபிப்பிராயம். லௌகிக லாப நஷ்டம் எவ்வாறாயினும் ரகசியத்தைக் காப்பாற்றுவது ஒரு பெரிய தார்மிக குணம் என்று எண்ண வேண்டியதில்லை. அது இல்லையே என்று ஸ்திரீகள் விசனப்பட வேண்டியதில்லை. ரகசியத்தைக் காப்பாற்றும் சக்தி இல்லாமலிருப்பது அறத் துறையில் ஒரு பெருங் குறையல்ல. பெண்களுக்கு இயற்கையான அன்பினால் இரகசியங்களைக் காப்பாற்றுவதில் குறை ஏற்படலாம்.

ஆயினும் பெண்கள் சிலர் ரகசியங்களை நன்றாகவே காப்பாற்றி வருகிறார்கள். தவிர, ஆண் மக்கள் எல்லாருமே இந்தச் சாமர்த்தியம் பெற்றிருக்கிறார்கள் என்றும் சொல்ல முடியாது. பயிற்சி பேதத்தினாலும் தொழில் பேதத்தினாலும் உண்டாகும் வித்தியாசங்களை ஆண்களின் குணம் பெண்களின் குணம் என்று பிரித்துச் சொல்லிவிடுவது உலக இயல்பு.



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 132. விழவில்லையா காதில்!

○ ● ○

காதல் வெறி சூர்ப்பனகையை ...ன்ன பாடெல்லாமோ படுத்துகிறது.

...யார் இந்தக் கொடுமையை உனக்குச் ...ய்தது, என்று கரன் கேட்டான் — ...தற்குப் பதில் என்ன சொல்லுகிறாள் ...வள்? ராம லக்ஷ்மணர்கள் தபசிகள், ...ரர்கள் உயர்ந்த லக்ஷ்யம் கொண்ட ...ர்கள், மன்மதன் போன்றவர்கள் என் ...றெல்லாம் சொன்னாள். அதோடு நிற்க ...ல்லை. அரக்கர்களையே வேரறக் களைய ...னைக்கிறார்கள் என்றும் சொல்லுகிறாள். ...ண்மைதான். ஆனாலும் ராமலக்ஷ்மணர் ...ளைப் பற்றி அப்படிச் சொன்னது உசிதம் ...ல்ல என்ற நினைவு வருகிறது.

...உடனே கரனுடைய கவனத்தை ...வேறொரு பக்கம் திருப்புவதற்காக கதை ...ட ஆரம்பித்து விடுகிறாள்.

'' உலகத்திலானாலும் சரி, வானத்தி...லானாலும் சரி, வேறு எங்கே யானாலும் ..., கற்பனை பண்ணிப் பார்த்தாலும் ..., யாவராலும் காண முடியாத ஒரு ...தவளை, கண்ணுக்குப் பெண் போலத் ...தோன்றும்'' என்று ஆரம்பிக்கிறாள்.

...மண்ணில் நோக்குறில்,
வானில் மற்றினில்
...எண்ணி நோக்குறில்
யாவர்க்கும் நோக்கலாப்
...பெண்ணின் நோக்குடை
யாள்! ஒரு பேதையேன்
...கண்ணின் நோக்கிய
சொல்லரும் காட்சியாள்!'

[எண்ணி நோக்குறில்: பாவனை செய்து ...ர்த்தாலும்; பெண்ணின் நோக்குடையாள்: ...ய்வ அணங்கு ஒன்று பெண்ணுக்கு உரிய ...ழகை எல்லாம் தரித்து வந்ததாய்; ஒரு ...தையேன்: கல்வி அறிவில்லாத நான்; ...ண்ணின் நோக்கிய: கண்ணாரக் கண்ட; ...சொல்லரும் காட்சியாள்: எடுத்துச் சொல்ல ...டியாத அவ்வளவு அழகு வாய்ந்தவள்.]

இந்த வர்ணனையைக் கேட்ட கரன் அப்பாவி என்ன செய்வான்! வாயடைத்துப் போய் விட்டது அவனுக்கு. மேலும் அளக்கிறாள் சூர்ப்பனகை.

'கண்டு நோக்கி, அக்
காரிகை யாள்தனைக்
கொண்டு போவல்
இலங்கையர் கோக்கெனா,
விண்டு மேல்விழுந்
தேனை வெகுண்(டு)அவர்
துண்டம் ஆக்கினர்
மூக்(கு)'எனச் சொல்லினாள்.

[அக்காரிகையாள் தனை: அந்த அழகு வாய்ந்த பெண்ணை; கொண்டு போவல் இலங்கையர் கோக்கு எனா: கொண்டு போக வேண்டும் ராவணனுக்கு என்று எண்ணி; விண்டு: இடையில் நின்ற வீரர்களை விலக்கி; மேல் விழுந்தேனை: பெண்ணினிடம் ஓடிப் பாய்ந்த என்னை; வெகுண்டு அவர் துண்டம் ஆக்கினர் மூக்கு: கோபம் கொண்டவராய் மூக்கை அரிந்து விட்டார்கள்.]

சூர்ப்பனகையின் வாக்கு மூலத்திலேயே அக்கிரமம் செய்தது அவன்தான் என்று வெளிப்படையாக இருக்கிறது. இருந்தால் என்ன? சாம்ராஜ்ய ஹோதா வந்து முன்னிற்கிறது. கரனுக்குக் கோபந்தான் பொங்குகிறது. அந்தக் கோபாவேசத்தில் "அந்த அயோக்கியர்கள் தோண்டி விட்டார்களே உன் மூக்கை! காட்டு அந்த மூக்கை!" என்கிறான்.

கேட்ட வன்உரை,
'கண்டிலன், கேடினர்
தோட்ட நுங்கில்த்
தொலையுறு மூக்கினைக்

காட்(டு)'என் னஎழுந்—
தான், எதிர் கண்டவர்
நாட்டம் தீய
உலகைந டுக்குவான்.

[கேட்டனன் உரை: சூர்ப்பனகை சொன்னதைக் கரன் கேட்டானோ இல்லையோ; கண்டிலன்: என் கண்ணுக்குத் தெரியவில்லையே; கேடினர் தொட்ட: தங்களுக்குக் கேடு காலத்தை விளைவித்துக் கொண்ட அந்தப் பாதகர்கள் தோண்டி எடுத்த; நுங்கித் தொளையுறும் மூக்கினைக் காட்டு: பனை நுங்கைப்போலத் தொளைபட்ட மூக்கினைக் காட்டுவாயாக; என எழுந்தான்: என்று சொல்லிக் கொண்டே ஆங்காரத்தோடு எழுந்தான் — யார்; எதிர் கண்டவர் நாட்டம் தீய: எதிரில் நின்று பார்த்தவர்களது கண் தீய்ந்துபோகும், அவ்வளவு உக்ரமாக; உலகை நடுக்குவான்: உலகத்தார் எல்லாரும் நடுங்கும்படியாகப் போர் செய்பவன்—கரன்.]

கரன் எழுந்து நிற்கிறான். கோபாக்கினி பொங்க விழிக்கிறான். அரற்றுகிறான்:

எழுந்து நின்றுல(கு)
எழும்எ ரிந்துகப்
பொழிந்த கோபக்
கனல்உகப் பொங்குவான்;
'கழிந்து போயினர்
மானுடர் என்னுங்கால்,
அழிந்த தோஇவ்
அரும்பழி' என்னுமால்

[எரிந்து உக: எரிந்து சாம்பலாய்ப் போக; கனல் உக: நெருப்புக் கொப்புளிக்கும்படி; பொங்குவான்: மேலும் மேலும் கோப பொங்கினவனாய்: கழிந்து போயின மானுடர்: தப்பி ஓடி விட்டார்கள் அந் மனுஷர்கள்.]

அற்ப மானுடர் அல்லவா ராவணன தங்கையை அவமானப் படுத் விட்டார்கள்? இந்தப் பழி ராவணனை விட்டும் நம்மை விட்டும் போகவ செய்யும்? என்று ஒரேயடியாய்க் கவலையு கோபமும் கரனை வருத்துகின்றன. அ மானம் சாமானியப் பட்டதா!

# எல்லாம் பணத்திலே!

பகீரதன்

பணம், பணம், எதற்கெடுத்தாலும் பணம் என்று பரிதவிப்பவர் பாலகோபாலன். பாலகோபாலனுக்கு ஆசை, ஆர்வம், அன்பு எல்லாம் பணத்தின்மேல்தான். "பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை! என்று பொய்யாமொழி சொல்லவில்லையா?" என்பதாக எப்பொழுதும் புலம்பிக் கொண்டே இருப்பார்.

பாலகோபாலனின் பணப் பைத்தியம் அவருடைய அருமை மனைவி லக்ஷ்மிக்குக் கொஞ்சங்கூடப் பிடிப்பதில்லை. "இப்படி ஒரேயடியாகப் பணத்திற்கு அடிமையாகி விட்டாரே, இதிலிருந்து விடுதலை பெற வழியே கிடையாதா?" என்று ஏங்குவாள்.

இரவென்றும் பகலென்றும் பாராது இடைவிடாது அன்புப்பணி செய்து, அவருக்கு வேண்டிய அவ்வளவு தேவைகளையும் ஆசையுடன் நிறைவேற்றினாலும் அவரது முகத்தில் கொஞ்சங்கூடச் சந்தோஷத்தை எதிர் பார்க்க முடிய வில்லையே என்று அவள் அன்பு உள்ளம் தவியாய்த் தவிக்கும்.

எப்படியாவது தன்னுடைய கணவரின் அன்பைப் பெற்றுவிட வேண்டும் என்று எவ்வளவோ வழிகளைக் கையாண்டு பார்த்தாள் லக்ஷ்மி.

காதலின் உயர்வைப்பற்றித் தன் கணவனுக்குக் காதல் கவியை எடுத்துச் சொன்னாள்.

இராமபிரான் சீதைமீது கொண்டிருந்த காதலைப் பற்றிச் சொன்னாள். நளனுக்கும் தமயந்திக்கும் இடையே இருந்த எல்லை காண முடியாத அன்பை எடுத்துச் சொன்னாள். என்ன சொல்லி என்ன பயன்?

எல்லாவற்றுக்கும் பாலகோபால "அவர்கள் எல்லாம் அரசர்கள். பெரு செல்வம் படைத்தவர்கள். அப்பேர்ப்பட்ட களுக்குக் காதல் செய்வதைத் தவிர வே வேலைதான் என்ன?" என்று கேட் விட்டுச் சிரிப்பான்.

லக்ஷ்மியின் மனசு தன் கணவரின் பதிலை கேட்டு அலைகடல் துரும்பென அல்ல பட்டது. பதில் சொல்ல முடியாமல் பரிதவி தாள். இப்படி எத்தனையோ நாட்கள்.

ஒரு நாள் லக்ஷ்மியும் பாலகோபாலனு சினிமா பார்த்துக்கொண்டிருந்தார்கள். சி மாவில் ஒரு காட்சி. பரம ஏழையான ஒருவ தன் மனைவியிடம் அன்புடன் பேசிக் கொண் இருந்தான். அந்த ஏழையின் மனைவி த கணவரின் அன்பு வெள்ளத்தில் மூழ்கி மெ மறந்து கிடந்தாள். அந்தக் காட்சியை பெரிதும் அனுபவித்த லக்ஷ்மி, சந்தர்ப்ப தைக் கைவிடாமல் தன் கணவரிடம், "பார் தீர்களா? பரம ஏழையாக இருந்தும் அவ தன் மனைவியிடம் எவ்வளவு அன்பாயிரு கிறான்! தாங்களும் இதுபோல்......" என் ஏதோ சொல்ல ஆரம்பித்தாள்.

இதற்குப் பாலகோபாலன் சொன்ன பதி அவளைத் தூக்கிவாரிப் போடுவதாயிருந்த

"சரி, சரி; போதும், வாயை மூடு! அன் செலுத்துகிறானும் அன்பு! அவன் ஒன்று அவளிடம் சும்மா அன்பு செலுத்த வில்லை. இந்த சினிமாவை எடுத்தவனிடம் பத் யிரம் ரூபாய் பணத்தை வாங்கிக் கொண் தான் அவன் அவளிடம் அன்பு செலுத் கிறான் ...!" என்று பாலகோபாலன் சொன் வும், லக்ஷ்மிக்கு மேலே சினிமாவையு ரசிக்க முடியாமல் போயிற்று.]

# வாழ்க்கைச் சகடம்

ஏ. கே. பட்டுசாமி

சுசீலா எதிரே இருந்த நிலைக்கண்ணாடியில் தன் உருவத்தைப் பார்த்தாள். அதில் கண்ட அலங்கோலமான தனது உருவம் அவளுக்குத் திருப்தியை அளித்தது. இந்திரலோகத்தையே அவளுக்குப் பரிசாக அளிப்பதானாலும் அந்தச் சமயத்தில் அவள் தன்னை அலங்காரம் செய்து கொள்ள இசைந்திருக்க மாட்டாள். யாருக்காகத் தன்னை அலங்கரித்துக் கொள்ள வேண்டுமோ, — யாரை அவள் மலர்ந்த முகத்துடன் வரவேற்க வேண்டுமோ — அவர் தன்னை அலட்சியம் செய்த பிறகு அவளுக்கு என்ன அலங்காரம் வேண்டிக் கிடக்கிறது?

அன்று அவன் புறப்படும்போது "போகிறேன்" என்றுகூட அவளிடம் ஒரு வார்த்தை சொல்லிக் கொள்ளாமல் போய் விட்டான். கடந்த மூன்று வருடகாலமாக நேரான ராஜபாட்டையில் சென்று கொண்டிருந்த அவர்களது வாழ்க்கைச் சகடம் அன்று திடீரென்று பாதையை விட்டு விலகிக் கரடுமுரடான பள்ளத்தில் இறங்கிவிட்டது.

சுசீலா அன்று பூராவும் சாப்பிடாமல் கூட இடிந்து போய் உட்கார்ந்திருந்தாள். காலையில் தன் புருஷனுக்கும் தனக்கும் நடந்த சச்சரவில் அவன் சொன்ன சொற்களையும் அவள் அவற்றிற்குக் கூறிய பதில்களையும் நினைத்து நினைத்துக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள்.

வேறொன்றுமில்லை; "காப்பிப் பொடியும் சர்க்கரையும் வாங்க வேண்டும், இரண்டு ரூபாய் கொடுங்கள்!" என்று சுசீலா அன்று அவனைக் கேட்டதுதான் தாமதம். ராமலிங்கம் ஆச்சரியத்துடன் அவளை நோக்கினான்!

"தேதி பன்னிரண்டாகவில்லை. இதற்குள்ளாகவா உன்னிடம் கொடுத்த பணம் பூராவையும் செலவழித்து விட்டாய்? எனக்கு மாதத்தில் ஒரு தடவைதான் சம்பளம் கொடுக்கிறார்கள் தெரியுமா?"

சுசீலாவுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

"உங்கள் பணத்தை நான் திருடிக் கொண்டேனா? யாருக்காவது எடுத்துத் தானம் பண்ணிவிட்டேனா? கணக்குப் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

"இப்போ யார் என்ன சொல்லி விட்டார்கள்! ஏ அப்பா! ஏன் இவ்வளவு பதட்டம்! காப்பிப் பொடி வாங்கி இன்னும் நாலு நாள்கூட ஆகவில்லையே என்றுதான் கேட்டேன்!"

"தினம் நாலு சிநேகிதர்களை அழைத்துக் கொண்டுவந்து காப்பிக்கு ஆர்டர் போட்டால் வாங்கின காப்பிப் பொடி அப்படியே உட்கார்ந்திருக்குமா?"

"சரிதான், போ! வாயாடத்தான் தெரியும்! குடித்தனத்தைச் செட்டாக நடத்தத் தெரியாது! உன்னைப்போல் தானே சரோஜாவும்! அவள் புருஷனுக்கு என்னைவிடக் குறைந்த சம்பளம்! ஒரு குழந்தை வேறே இருக்கிறது! அவள் எவ்வளவு சமர்த்தாகக் குடித்தனம் பண்ணுகிறாள்!"

சரோஜா மாடியில் குடியிருப்பவள். ஏறக்குறைய சுசீலாவின் வயதுதானிருக்கும். எப்போதுமே மற்றொருத்தியை விடத் தான் குறைந்தவள் என்று பொருள் படும்படி பேசிவிட்டால் அதை எந்தப் பெண்ணாலும் சகித்துக் கொண்டிருக்க முடியாதல்லவா?

"உங்களுக்குச் சரோஜா உயர்த்தியானால் இருந்துவிட்டு போகட்டும்! எனக்கு அதைப் பற்றி ஆக வேண்டியது ஒன்றுமில்லை. அவளது நாகரிகமும் அறிவும் எனக்கு எங்கிருந்து வரும்! நான் இருக்கிறபடி இருந்து விட்டுப் போகிறேன். உங்களுக்கு என்னைப் பிடிக்கவில்லையானால் உங்கள் கையால் என்னைக் கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளி விடுங்கள்! தொலைந்து போகிறேன்!"

"வாயை மூடு! ஒன்றுக் கொன்று உளறாதே! இதற்கும் நான் கொடுத்த பணம் பூராவையும் நீ பத்துத் தேதிக்குள் செலவழித்துவிட்டு நிற்பதற்கும் ஒரு சம்பந்தமுமில்லை!" என்று சொல்லிக் கொண்டே ராமலிங்கம் கோபத்தோடு இரண்டு ரூபாய்களை எடுத்து அவள் முன் வீசி எறிந்து விட்டு, ஆபீஸுக்குப் புறப்பட்டுவிட்டான். சுசீலா கண்களில்

தாரை தாரையாகக் கண்ணீர் வழிய துக்கத்தோடு உட்கார்ந்திருந்தாள்.

★

பொழுது சாய்ந்து இருட்டியதையும் உணராமல் கமலா காலையில் உட்கார்ந்திருந்த இடத்தை விட்டு அசையாமல் உட்கார்ந்திருந்தாள். நேரம் ஆக ஆக அவளது கோபமும் துயரமும் சிறிது சிறிதாகத் தணியத் தொடங்கின.

வாசற்படி யருகில் காலடிச் சத்தம்! அவர்தான் வருகிறாரோ?......

"கமலா!" என்றது ஒரு பெண் குரல்; சரோஜா உள்ளே நுழைந்தாள். கமலா எழுந்து மின்சார விளக்கைப் பொருத்தினாள்.

"கமலா, இது என்ன இருட்டில் உட்கார்ந்திருக்கிறாயே! உடம்புக்கு என்ன? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?"

"இல்லை சரோஜா! கொஞ்சம் தலைவலி. உடம்பு ஒரு மாதிரியாக இருக்கிறது."

"எங்கள் லேடீஸ் கிளப்பில் நாளை இரவு ஒரு நாடகம் நடத்தப் போகிறோம். நீ ஒரு டிக்கட் வாங்கிக் கொள்வாயா என்று கேட்க வந்தேன்!"

"உனக்குத்தான் தெரியுமே சரோஜா, நான் அதிகமாக எங்கேயும் போகிறதில்லை யென்று! மேலும் உடம்பும் சரியாக இல்லை. மன்னித்துக் கொள்!"

"சரி, நான் போகிறேன். யாராவது என்னைத் தேடிக் கொண்டு வந்தால் தயவு செய்து நான் ஒத்திகைக்காக கிளப்புக்குப் போய்விட்டேன் என்று சொல்லிவிடு. அவரும் இன்றைக்கு ஊரில் இல்லை."

சரோஜா வெளியே புறப்படுவதற்கும் ராமலிங்கம் ஆபீஸிலிருந்து திரும்பி வருவதற்கும் சரியாக இருந்தது. ராமலிங்கம் ஒதுங்கி நின்றான். சரோஜா அவனைப் பார்த்துப் புன்முறுவலுடன் "எங்கள் லேடீஸ் கிளப் மெம்பர்கள் எல்லோரும் சேர்ந்து வி. பி. ஹாலில் நாளை இரவு டிராமா போடுகிறோம். தாங்கள் ஒரு டிக்கட்டு வாங்கிக் கொள்கிறீர்களா?", என்று கேட்டாள்.

ராமலிங்கம் சிறிது தயங்கினான். பிறகு பர்ஸிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்து ஒரு டிக்கட்டு வாங்கிக் கொண்டான். சரோஜா, "தாங்ஸ்" என்று கூறிக்கொண்டே வெளியே போனாள்.

"வெட்கம் கெட்ட சிறுக்கி!" என்றாள் கமலா. இந்த நாடகத்தைக் காண அவளுக்கு ஒரே எரிச்சலாக இருந்தது. வீட்டுக்குச் சாமான் வாங்கப் பணம் கொடுக்க மூக்கால் அழும் மனிதர், சரோஜா டிராமா போடுகிறாள் என்றால் தாராளமாக இரண்டு ரூபாயை எடுத்து வீசுகிறாரே!

ராமலிங்கம் டிக்கட்டை கமலாவுக்கு எதிரில் மேஜைமீது வைத்து விட்டு, கோட்டைக் கழற்றினான்.

இப்போது அவனுக்குச் சாப்பாடு போட்டாக வேண்டும். அவனும் கை கால்களைக் கழுவிக்கொண்டு சாப்பிடத் தயாரானான். கமலா சமையல் செய்யவே இல்லை. ஒரு கணம் திகைத்தாள். பிறகு சமாளித்துக்கொண்டு இலையைப் போட்டு அன்று காலை அவன் சாப்பிடாததால் அப்படியே மிகுந்திருந்த சாதத்தைப் பரிமாறினாள்.

ராமலிங்கம் வாய் திறவாமல் ஆறிப் போயிருந்த ஆகாரத்தைப் புசித்தான். கை கழுவிக்கொண்டு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து தினசரிப் பத்திரிகையைப் புரட்டத் தொடங்கினான்.

கமலா எஞ்சியிருந்த ஒரு கவளம் அன்னத்தைப் பெயருக்காக இலையில் வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள்.

"கமலா, நாளைக்கு இன்னொரு டிக்கட்டு வாங்கிக்கொள். நாம் இரண்டு பேரும் டிராமாவுக்குப் போகலாம்!" என்றான் ராமலிங்கம்.

தன் கணவன், தானே சமாதானத்திற்கு வருவானென்று அவள் நினைக்கவில்லை. இருந்தாலும் அவளது கர்வமும் சுய கௌரவ மனப்பான்மையும் அவ்வளவு சுலபத்தில் அவளை வழிக்கு வரவொட்டாமல் தடுத்தன. அவள் பதில் பேசவில்லை.

அந்தச் சாதத்தை அவளால் சாப்பிட முடியவில்லை. குளிர் காற்றில் விறைத்துப்போய் 'சில்'லென்றிருந்தது. பாவம்! அவர் மாத்திரம் இதை எப்படிச் சாப்பிட்டார்! ஏதாவது வாய் திறந்து மீண்டும் சண்டையைக் கிளப்பக்கூடாது என்ற எண்ணத்தினால்தானே?

இதுதான் ஸ்திரீகளின் சுபாவம். அற்பத்திற் கெல்லாம் கோபம்; ஒன்றுமில்லாததற் கெல்லாம் துக்கம். இவை அவர்களது பிறவிக் குணங்கள் போலும்!

சமயலறைக் காரியங்களைத் துரிதமாக முடித்துக்கொண்டு அவளும் தன் கணவனுக்கெதிரில் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

பத்திரிகைத் தாள்கள் புரட்டப்படுவதாலுண்



ரகும் சல சலப்பைத் தவிர அவ்வறை யில் அப்போது வேறொருவித சந்தடியு மின்றி நிச்சப்தம் குடிகொண்டிருந்தது. மௌனமாக உட்கார்ந்திருந்த ஒவ்வொரு விநாடியும் சுசீலாவுக்கு ஒவ்வொரு யுக மாகத் தோன்றி அவளது மனதில் ஒரு வித வேதனையை எழுப்பியது.

கடைசியில் பொறுமையை இழந்து அவளே வாய் திறந்தாள். "இன்றைக்குப் ?...ரில் ஏதாவது விசேஷம் உண்டா?"

"இதோ, நான் படித்தாகிவிட்டது. நீ வேண்டுமானால் படி" என்று பத்திரி கையை எதிரிலிருந்த மேஜைமீது வைத்து விட்டு, ஒரு கதைப் புத்தகத்தை எடுத்து வைத்துக்கொண்டு உட்கார்ந்தான் ராம லிங்கம்.

மீண்டும் அவளுக்கு ஏமாற்றம்!



கடிகாரத்தில் மணி ஒன்பதடித்தது. ராமலிங்கம் வைத்த விழி வாங்காமல் புத்தகம் படித்துக் கொண்டிருந்தான். சுசீலாவுக்கு இருப்புக் கொள்ளவில்லை. சுற்று முற்றும் பார்த்தாள். பிறகு மெது வாக எழுந்து சமயலறைக்குப் போய்ப் புடவைத் தலைப்பை விரித்துப் படுத்துக் கொண்டாள். ராமலிங்கமும் அதைக் கவ னித்ததாகக் காட்டிக்கொள்ளவே யில்லை.

எலெக்டிரிக் விளக்கு அணைக்கப்படும் ஓசை கேட்டது. அதைத் தொடர்ந்து ராமலிங்கம் படுக்கை அறையை நோக்கிச் செல்லும் சத்தம்; படுக்கை விரிப்புகளின் சலசலப்பு, பிறகு நிசப்தம். சரி, அவரும் படுத்துக் கொண்டு விட்டார்!

சமயலறையில் ஒரே இருட்டு. எலிகள் வேறு அங்கு மிங்கும் ஓடிக் கொண்டிருந் தன. சுசீலாவுக்குத் தூக்கமே வரவில்லை. இருட்டில் கண்ணை விழித்த வண்ணம் படுத்துக் கொண்டிருந்தாள். சரோஜா வின் உருவமும் ராமலிங்கத்தின் உருவ மும் மாறி மாறி அவளெதிரே வந்து நிற் பது போலிருந்தது.

வெகு நேரத்திற்குப் பிறகு கூடத்தி லிருந்த கடிகாரம் ஒரு முறை ஒலித்தது. பன்னிரண்டரையோ, ஒன்றோ, ஒன் றரையோ நிச்சயமாகச் சொல்ல முடி யாது. சுமார் மூன்றுமணிக்குச் சுசீலா அலறிக் கட்டிக் கொண்டு எழுந்தாள். அப்போதுதான் அவள் கண்ணயர்ந்திருக்க வேண்டும்! ஏதோ சத்தத் தைக் கேட்டு விழித்துக் கொண்டாள்.

"தட் தட் தட்"

அவளது மார்பு படபட வென்று அடித்துக் கொண்

டது. சத்தம் எங்கிருந்து வருகிறது? மாடியிலிருந்தா! யாராவது திருடன்......

“ தட் தட் தட் ”

அவளுக்குப் பயமா யிருந்தது. சமய லறையில் எலக்டிரிக் விளக்குக்கூட' இல்லை. இருட்டில் கூடத்துக்குப் போய் ஸ்விச் இருக்குமிடத்தைக் கண்டு பிடித்து விளக்கைப் பொருத்தலா மென்றால் அவ்வளவு அவளுக்குத் தைரியம் உண்டாகவில்லை.

“ தட் தட் தட் ”

அவரைக் கூப்பிடலாமா! ஏன், இந்தச் சத்தம் அவருக்குக் கேட்க வில்லையா?

ராமலிங்கம் நிம்மதியாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான்.

அவரைக் கூப்பிடுவதா வேண்டாமா?

ஒரு கணம் கௌரவத்திற்கும் பயத்திற்குமிடையே அவள் ஊசலாடினாள். தன்னுடன் பேச விரும்பாத அவனிடம் தனக்குப் பயமா யிருக்கிறது என்று முறையிட்டுக் கொள்ள அவளது மனம் சம்மதிக்க வில்லை.

“ தட் தட் தட் ”

அவளது வைராக்கியம் பறந்தது. ராமலிங்கம் படுத்திருந்த அறையை நோக்கி அவள் தன்னை மறந்து வெறிபிடித்தவள் போல் ஓடினாள். அவனைத் தீண்டி, “ஐயோ! எழுந்திருங்களேன்!” என்று அலறினாள்!

ராமலிங்கம் படுக்கை யறையிலிருந்து துள்ளி யெழுந்து வெளியே ஓடிவந்தான்.

விளக்கு பொருத்தப்பட்டது. பயத்தினால் வெட வெடவென்று நடுங்கிக் கொண்டிருந்த தன் மனைவியை ராமலிங்கம் அணைத்துத் தழுவிக் கொண்டான்.

“சுசீ! ஏன் அப்படி அலறினாய்? பயமா யிருந்ததா?”

“மாடியிலிருந்து ஏதோ சத்தம் வருகிறதே உங்களுக்குக் கேட்கவில்லை? திருடன் யாராவது......”

“சீ பைத்தியம்! திருடன் இப்படித் தான் சத்தம் செய்துகொண்டு வருவானா!”

ராமலிங்கம், கையில் ஒரு டார்ச்சு விளக்குடன் மாடிப் படியில் ஏறினான். சுசீலாவும் அவனுடன் சென்றாள்.

“யாரது உள்ளே!”

“அம்மா! ...... அம்மா! ...... பயமா யிருக்கே!”

உள்ளேயிருந்து வந்த அந்த அலறல் யாருடையதென்று சுசீலாவுக்குப் புரிந்து விட்டது.

“பாவம்! சரோஜாவின் பெண் சரஸா தான் அழுகிறாள்! அந்த ராட்சசி, குழந்தையைத் தனியாக உள்ளே தூங்கவிட்டுக் கதவைப் பூட்டிக்கொண்டு போயிருக்கிறாள்!... சரஸா பயப்படாதே! கதவைத் திறக்கச் சொல்லுகிறேன்! — சீக்கிரம் எப்படியாவது கதவைத் திறவுங்கள்.”

கதவு வெளிப்புறம் பூட்டப்பட்டிருந்தது. ராமலிங்கம் ஒரு கடப்பாறையைக் கொண்டுவந்து பூட்டையும் தாழ்ப்பாளையும் நாதாங்கியோடு பெயர்த்தெறிந்து கதவைத் திறந்தான்.

டார்ச்சு விளக்கின் வெளிச்சத்தில் உள்ளே பயத்தினால் நடுங்கிக் கொண்டு ஒரு சிறிய உருவம்—அதுதான் சரோஜாவின் நாலு வயதுப் பெண்—கையில் ஒரு நூல் கழியுடன் தேம்பிக்கொண்டு நின்றிருந்தது. கையிலிருந்த அந்த ஆயுதத்தினால்தான் அவள் கதவைத் தட்டியிருக்க வேண்டும்!

கவனிப்பாரற்றுத் தனியே சிறைப் பட்டுக் கிடந்த அந்த ஜீவனைச் சுசீலா அன்போடு வாரியெடுத்துக் கொண்டாள்.

“சீ, என்ன மனுஷி! குழந்தையைத் தனியே தூங்க வைத்துப் பூட்டிவிட்டு தெருச்சுற்றப் போய் விட்டாளே, அவள் மனுஷ ஜென்மமா! இல்லை ஏதாவது பேயா!” என்றான் ராமலிங்கம்.

அவன் கூறிய அந்த வார்த்தைகள் சுசீலாவின் மனதில் ஆழப் பதிந்தன. வாஸ்தவந்தான். இப்படிக் குழந்தையைத் தவிக்க விட்டு விட்டு, கிளப்பும் நாடகமும் என்ன வேண்டிக் கிடக்கிறது! இத்தகைய வாழ்க்கை தனக்கில்லையே என்றல்லவா அவள் சற்று முன் வரையில் ஏங்கினாள்!

காலையில்தான் கடுமையாகப் பேசியதற்காக அவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டுமென்று தவியாய்த் தவித்தது அவளது பேதை மனம். ஆனால் மீண்டும் அந்த விஷயத்தைப் பற்றி எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது?

குழந்தை சரஸா சுசீலாவின் படுக்கையில் — சமயலறையி லல்ல — படுத்துக் கொண்டிருந்தாள். ராமலிங்கமும் சுசீலாவும் அருகில் உட்கார்ந்திருந்தனர்.

“சுசீ, காலையில்......”

“மன்னித்துக் கொள்ளுங்கள்! என்ன இருந்தாலும் நான் பெண்தானே! புத்தியில்லாமல் அனுவசியமாய்ப் படபட வென்று பேசி விட்டேன்!” என்றாள் சுசீலா

“இல்லை சுசீலா! தப்பு என்மேல்தான்! மாசு மருவற்ற உன்னை, இந்தச் சரோஜாவோடு ஒப்பிட்டேனே, என் புத்தியை என்னவென்று சொல்லுவது!” என்றான் ராமலிங்கம்.

வழி தவறிப் பள்ளத்தில் இறங்கிய அவர்களது வாழ்க்கைச் சகடம், மீண்டும் ராஜபாட்டையை அடைந்தது.



# அரசனின் கோபம்

வி. ஆர். ராமஸ்வாமி

அரசன் நாவிதன்மேல் கடுங் கோபங் கொண்டான். மந்திரியை அழைத்து "இவனுக்கு ஏழு வருஷம் கடுங் காவல் விதித்திருக்கிறேன். உடனே சிறையிடு" என்றான். அரசன் நாவிதன் மேல் இவ்வாறு சினம் கொண்டதற்குக் காரணம்; அரசனுடைய செல்வச் சிறு குமாரனுக்கு முடி வைக்கும் பொழுது நாவிதன் அவன் வலது காதில் கைதவறிச் சிறிய காயத்தை உண்டாக்கி விட்டதுதான்.

அந்த நாவிதன் வேடிக்கையாய்ப் பேசுவான். அது நாவிதர்கள் இயற்கையான குணமல்லவா? அவன் க்ஷவரம் செய்யும் பொழுது சொல்லும் விசித்திரமான கதைகளையும், பேசும் வேடிக்கைப் பேச்சுகளையும் கேட்டு ஆனந்தப் படுவார்கள்.

சேனாபதி தன் அழகிய மீசையை அவனிடத்தில் தான் சரிப்படுத்திக் கொள்வான். ஆகையால் அவனுக்கு கோபத்தால் கொடுக்கப்பட்ட இந்த கொடுமையான தண்டனை ராஜ சபையில் எல்லாரையும் மிகவும் வருத்திற்று. ஆனால் முன் கோபியான அரசனை நேரில் எதிர்த்துப் பேச யாருக்கும் தைரியம் வரவில்லை.

சேனாபதி மந்திரியுடனும் புரோகிதர்களுடனும் ஏதோ ரகசியமாய் யோசனை செய்தான். புரோகிதன் பையனுடைய ஜாதகத்தில் அவன் உயிருக்கு ஏதோ அபாயம் நேரிடப் போவதாகவும், நாவிதனால் தீருமென்று இருப்பதாகவும் சொன்னான். அரசனுக்கு கோபம் தணிந்தது. ஆனால் தான் முதலில் போட்ட உத்தரவை மாற்ற விரும்பவில்லை.

சேனாபதி வேறு வழியில்லை யென்று கண்டு சுற்றுப் பக்கம் தேசங்களில் நடக்கும் சமாசாரங்களை அறிவதற்கு நியமிக்கப் பட்டிருந்த சாரணன் ஒருவனைக் கூப்பிட்டு அவன் காதில் ஏதோ ரகசியமாய்ச் சொன்னான்.



அடுத்த நாள் சேனாபதி அரசனை மான் வேட்டைக்கு அழைத்தான். அரச குமாரன் தானும் வர விரும்பினான். எல்லாரும் காட்டிற்குச் சென்றார்கள். காட்டில் ஓர் அழகிய கலைமான் தோன்றிற்று. அதைத் துரத்தும் ஆத்திரத்தில் அரச குமாரனை எல்லாரும் மறந்து விட்டார்கள். ஓர் காட்டு மனிதன் எங்கிருந்தோ குதிரை மேல் தோன்றி அரச குமாரன் கண்களைக் கட்டி விட்டு தன் குதிரை மேல் ஏற்றிக் கொண்டு ஒரு குகைக்குள் சென்றான். குகையில் இருந்த பூசாரியை நோக்கி "இந்தா நீ வேண்டின நரபலி" என்றான். பூசாரி அரச குமாரனைப் பரீக்ஷை செய்து அவன் காதில் கத்தி காய மிருப்பதைக் கண்டு "இவனைக் காளி ஏற்றுக் கொள்ள மாட்டாள். காதில் வெட்டுக் காயம் இருக்கிறது. மற்றவர்கள் கத்தி பட்டவனைக் காளிக்குப் பலியாகத் தரக்கூடாது," என்றான். காட்டு மனிதன் அரச குமாரனை மறுபடியும் காட்டில் கொண்டு போய்விட்டு விட்டான்.



அரச குமாரன் பின் தங்கி விட்டதை சேனாபதிதான் முதலில் கவனித்தான். எல்லாரும் மானைத் துரத்துவதை விட்டு விட்டு அரச குமாரனைத் தேடுவதில் ஈடுபட்டார்கள். கை கால்களும் கண்களும் கட்டப்பட்டுக் கிடந்த அரச குமாரனைக் கடைசியில் கண்டு





பிடித்து எல்லாரும் அரண்மனை வந்து சேர்ந்தார்கள். அரச குமாரன் நடந்ததை யெல்லாம் சொன்னான். அதைக் கேட்ட அரசன் நாவிதனால் தன்பிள்ளை காளிக்குப் பலியாகாமல் தப்பித்ததைக் கண்டு, நாவிதன் மேல் தயை கூர்ந்து அவனைச் சிறையிலிருந்து விட்டு விடக் கட்டளையிட்டான். இரண்டு பட்டு வேஷ்டிகளைப் பரிசாகவும் தந்தான்.





சேனாபதி அன்று சில ஆடைகளை ரகசியமாய் நெருப்பில் போட்டு கொளுத்தினான். அரசன் காட்டு மனிதனைப் பிடித்து வர ஆட்களை அனுப்பினான். ஆனால் காட்டு மனிதன் எங்கு தேடியும் அகப்படவில்லை.







# விளம்பர விநோதம்

ஸோமாஸ்

"சீரு சுறுப்பும் திறமையும் வாய்ந்த குமாஸ்தாக்கள் தேவை" என்ற விளம்பரம் கண்ணில் பட்டவுடன் ரகுராமன் தன்னிடம் சுறுசுறுப்பு இருக்கிறதா என்று யோசித்துக் கொண்டிருக்கவில்லை. உடனே சுறுசுறுப்புடன் ஒரு மனு எழுதி அந்தக் கம்பெனிக்கு அனுப்பி வைத்தான்.

மறுநாளே அந்தப் புதிய கம்பெனியில் ரகுராமனுக்கு வேலை கிடைத்தது.

"மிஸ்டர் ரகுராமன், இன்றைய தினம் அனுப்ப வேண்டிய கடிதங்கள் நிறைய இருக்கின்றன. அவைகளை எல்லாம் பொறுப்பாகத் தபாலில் சேர்த்து விடுங்கள். நான் ஆபீஸ் காரியமாகக் கொஞ்சம் வெளியூர் போகவேண்டியிருக்கிறது" என்று கூறிவிட்டு மானேஜர் போய்விட்டார்.

ரகுராமனுக்கு அன்று மூளை குழம்பி விடும்போல் ஆகிவிட்டது. சாதாரணமாக அவன் எதிலும் சுலபமாக மனதைக் குழப்பிக்கொண்டு விடுவான். வேலை கடுமையாக இருந்தால் கேட்க வேண்டுமா? எப்படியோ கட்டு எடுப்பதற்குள் எல்லாவற்றையும் தபாலில் சேர்த்துவிட்டு வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

அன்று ரகுராமன் ஆபீஸுக்கு வந்தபோது மானேஜர் தமது அறையில் உட்கார்ந்து ஓய்வு ஒழிவு இல்லாமல் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தார். அன்று மாலை வரையில் டெலிபோனில் பேசிப் பேசி அவருக்குத் தொண்டை கூடக் கட்டி விட்டது. நூற்றுக் கணக்கான தந்திகள் வேறு வந்து குவிந்து கொண்டிருந்தன.

மாலை ஐந்து மணிக்குத்தான் மானேஜருக்குக் கொஞ்சம் ஓய்வு கிடைத்தது. உடனே அவர் ஆபீஸ் பையனிடம் ரகுராமனைக் கூப்பிட்டனுப்பினார்.

ரகுராமன் பயந்துகொண்டு, குமாஸ்தாக்களின் ஏகபோக உரிமையான வளைவு, குழைவு, நெளிவுகளுடன் வந்து மானேஜர் சந்நிதியில் நின்றான்.

"என்ன மிஸ்டர், ரகுராமன்! நீர் இனிமேல் குமாஸ்தா வேலைக்கு லாயக்கில்லை...!"

"கோபித்துக் கொள்ளக்கூடாது. ஏதோ தெரியாத்தனமாய் நடந்து கொண்டு விட்டேன். மன்னிக்கணும்!"

"மன்னிப்பதா? மன்னிப்பதற்கு இதில் இடமிருக்கிறதா, யோசித்துப் பாரும்!"

"அப்படியில்லை, கொஞ்சம் பெரிய மனசு பண்ணணும்!"

"பெரிய மனசாவது, சின்ன மனசாவது! ஒன்றுமே தெரியாதவர்போல் நடிக்கிறீரே? உட்காரும்! நீர் குமாஸ்தாவாக இருப்பதற்குக் கொஞ்சமும் தகுதியற்றவர். நான் உம்மைத் தவறாக மதித்து விட்டேன். நமது புதிய 'பர்னிச்சர்' கம்பெனியை எப்படிப் பிரசித்தியடையச் செய்வது என்று நான் நெடுநாள் யோசித்துக் கொண்டிருந்தேன். கடைசியில் தான் எனக்கு அந்த யோசனை தோன்றிற்று. அதன்படி, நிறைய விளம்பரத் தாள்களை அச்சடித்து, எல்லாப் பெரிய மனிதர்களுக்கும் தபாலில் அனுப்பி வைப்பது என்று நிர்மானித்தேன். அந்தத் தாள்களைத் தான் அன்று உங்களிடம் கொடுத்து உறையில் போட்டு மேல் விலாசம் எழுதி அனுப்பச் சொன்னேன். இப்படிச் செய்யும் விளம்பரத்தில், எதிர்பார்க்கும் பலன் கிட்டாது என்பது உங்கள் அபிப்பிராயம் போலும்! ஆகவே, நான் ஊருக்குப் போயிருந்த சமயம் நீங்கள் விளம்பரத் தாள்களை வைக்காமலே நமது ஆபீஸ் விலாசம் அச்சடித்த வெறுங் கவர்களை மட்டும் எல்லோருக்கும் அனுப்பி விட்டீர்கள்! அதனால்தான் இன்று டெலிபோன் மூலமும், தந்தி மூலமுமாக என்னை எல்லாரும் ஓயாமல் விசாரிக்க ஆரம்பித்து விட்டார்கள். நான் சொன்னபடி நீங்கள் விளம்பரத் தாள்களை வைத்து அனுப்பியிருந்தாலும்கூட இவ்வளவு பிரசித்தி ஏற்பட்டிருக்காது!" என்றார் மானேஜர்.

"ஸார், ஞாபக மறதியாக......!" என்று மீண்டும் ஆரம்பித்தான் அப்பாவி ரகுராமன்.

"நீர் ஞாபக மறதியாகச் செய்த புத்திசாலித்தனத்தைத்தான் சொல்லுகிறேன். இனிமேல் நீரும் நானும் சேர்ந்தே இந்தக் கம்பெனியை நடத்துவோம். கம்பெனியின் விளம்பர இலாகா மானேஜர் பதவியை நீர் ஏற்றுக் கொள்ளும்!" என்றார் ஆபீஸ் மானேஜர்.

அதற்கு மேலும் தன்னை மன்னிக்கும்படி வேண்டிக் கொள்வதற்கு ரகுராமனுக்குப் பைத்தியமா, என்ன?





# காலக்ஷேபம்

## அவன் செய்த வேலை!

காலக்ஷேபம் நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது பாகவதருடைய பின்னே கூட்டத்தில் சிறு கற்களைப் பிரயோகித்துக் கொண்டிருந்தான்.

பாகவதர்:—ஏலே! அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?

அவன்:—நீ பாட்டிலே கதை சொல்லிண்டிரு, அப்பா! நான் இவர்களைத் தூங்காமல் பார்த்துக் கொள்கிறேன்!

—பி. கே. கிருஷ்ணமூர்த்தி.



## ஒற்றுமை!

பெண்:—அப்பா! நான் அவரிடம் கோபித்துக்கொண்டு வந்து விட்டேன். ஆமாம், அம்மா எங்கே?

தகப்பனார்:—அவள் என்னிடம் கோபித்துக் கொண்டு பிறந்தகத்துக்குப் போய்விட்டாள்!

—பின்னவாசல் கிட்டு.



## அதற்கில்லை!

ரஸ்தாவில் வந்த ஒரு காரை கான்ஸ்டபிள் கையைக் காட்டி நிறுத்தினான்.

டிரைவர் (பயத்துடன்):—நான் காரை வேகமாக ஓட்டவில்லையே! பத்து மைல் வேகத்தில்தானே ஓட்டிக்கொண்டு போனேன்?

கான்ஸ்டபிள்:—அதுக்கில்லே! என் சட்டைப் பொத்தானைச் சுத்தம் செய்யணும். கொஞ்சம் பெட்ரோல் கொடு அப்பா.

—மு. க. வேதாரண்யம்.



## வைத்தது வைத்தபடியே!

விருந்தாளி:—நேற்று காலை வேலைக்காரனிடம் ஒரு வேஷ்டியைத் தோய்க்கச் சொல்லி விட்டு வந்தேன். இன்னும் அது கல்லின் மேல்வைத்தது வைத்தபடியே இருக்கிறது.



எஜமான் (ஏதோ ஞாபகத்தில்):—அவன் ரொம்ப யோக்யனாச்சே! பிறத்தியார் பொருள் எதையுமே தொடமாட்டானே!

—கே. மோஹன்.

## ஆச்சரியம்!

பிச்சைக்காரன் ஒருவன் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் ''குருடன்'' என்று எழுதிய ஓர் அட்டை கிடந்தது. ஒரு கனவான் அவன் அருகில் இருந்த தட்டில் காலணாவை எறிந்தார். அது தட்டிலிருந்து வெளியே துள்ளி, உருண்டு ஓடியது. அதைக் கண்ட பிச்சைக்காரன் எழுந்து அதை எடுத்து வந்து தட்டுக்குள் போட்டுக் கொண்டான்.

கனவான்:—கண் தெரியாது என்று சொன்னாயே, இப்போது அந்தக் காலணாவை எப்படி எடுத்தாய்?

பிச்சைக்காரன்:—ஐயா! எனக்குக் கண் தெரியும். என் அண்ணனுக்குத்தான் தெரியாது. அவனுக்காகத்தான் இங்கே நான் இப்போது உட்கார்ந்து கொண்டிருக்கிறேன். அவன் சினிமா பார்க்கப் போயிருக்கிறான். அவன் திரும்பி வந்தவுடன் நான் போய் விடுவேன்!

—எஸ். டி. கபாலி.



## காணமற் போனது!

போலீஸ் இன்ஸ்பெக்டர், ஒரு வீட்டில் களவு போன சாமான்களின் ஜாபிதாவை எழுதிக் கொண்டு விட்டு, ''உம்......இன்னும் ஏதாவது காணுமென்றால் இப்போதே சொல்லி விடுங்கள். அப்புறம் ஒவ்வொன்றாகச் சொல்லிக் கொண்டு வந்து தொந்தரவு பண்ணாதீர்கள்!'' என்றார்.

வீட்டுக்காரச் சிறுவன்:— இப்போது தான் ஞாபகம் வருகிறது ஸார்! இதை வெல்லம் திருடின ஆளைக் காணோம்?

—ஆர். நாராயண ராவ்.



## தெரிந்த விஷயம்!

வேலையாள்:—ஸார்! இப்பொழுதுதான் அங்கெல்லாம் ஸிமெண்ட் பூசியிருக்கு; கால் அதன் மேல் படக்கூடாது.

வந்தவர்:—அது தெரிந்துதானப்பா 'பூட்ஸ்' காலோடே நடக்கிறேன்! —ஏ. தண்டபாணி



## நல்ல ஆட்டம்!

சர்க்கஸ் மானேஜர் (நாற்காலிகள் செய்து கொடுத்த தச்சனைப் பார்த்து):—நீர் செய்து கொடுத்த நாற்காலிகளின் கால்கள் ஒன்றுவது சரியாகவே இல்லை. அதன்மேல் உட்கார்ந்து ஆட்டம் பார்ப்பவர்கள் என்ன சொல்லுவார்கள்?

தச்சன்:—இது தெரியாதா? ஆட்டம் நல்ல ஆட்டமாக இருக்கிறது என்றுதான்!

—டி. எஸ். குப்புஸ்வாமி.

# ரெக்ஸோனா

## சரும அழகை உண்டாக்குகிறது
## ...சரும சுகத்தை பாதுகாப்பதன் மூலம்






ஆம், ஏனென்றால் ரெக்ஸோனா சுறுசுறுப்பாய் உற்சாகமூட்டிச் சரும சுகத்தைப் பாதுகாக்கிறது—சரும சுகத்திற்குச் சரும சௌந்தர்யமே உண்மையான அடிப்படை—சரும அழகைக் கொடுக்கும் பாத்தியதை தனக்கேயுண்டென்று ரெக்ஸோனா உண்மையாகச் சொல்லக்கூடும்.

இதை எப்படி ரெக்ஸோனா செய்கிறது? சரும வியாதியைப் போக்கும் கிருமி நாசினியாகிய *கேடில் என்னும் மருந்து அதிற் சேர்த்திருப்பதால் அது அவ்வாறு செய்கிறது. சரும உபத்திரவங்களும், சரும மாசமறுக்களும் அடிக்கடி அதிகமாய் உண்டாகும் இடங்களுக்கும்—சருமத்தின் ஒவ்வொரு அடிப்பாகத்திற்கும்—சுகமளித்துச் சுத்தம்செய்கிற கேடில் என்னும் மருந்தை ரெக்ஸோனாவின் விரைவில் உண்டாகும் நுரை கொண்டுபோய்ச் சேர்க்கும் சக்திவாய்ந்தது.

### ரெக்ஸோனா, குடும்ப சோப்

அழகான, புதுமைவாய்ந்த, விரைவில் நுரையைத் தரும் இந்த சிறந்த ஒப்பற்ற சோப்பின் குணங்களைக் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் புகழ்ந்து கூறுவார்கள். . . சரும அழகைத்தர அது அதிக சிறந்த சக்திவாய்ந்திருப்பதால் ஸ்திரீகள். . . ஆரோக்யமான சருமத்தின் அவசியத்தை எல்லா ஜனங்களும் அறிந்திருப்பதால் மனிதர்கள் . . . குழந்தைகளுக்கு இதைக் காட்டிலும் சிறந்த பாதுகாப்புடைய சோப்வேறு இல்லை. மருந்திடப்பட்ட ரெக்ஸோனாவின் நுரை உடலெரிச்சலைச் சாந்தப்படுத்துகிறது. ரணங்களை ஆற்றிக் காப்பாற்றுகிறது—குழந்தையின் சருமத்தைக் குளிர்ச்சியாகவும், சுகமுடையதாகவும் செய்கிறது. சரும சுகம் நிச்சயமாக ஏற்படக் குடும்பம் முழுவதும் ரெக்ஸோனாவை ஒழுங்காய் உபயோகிக்க வேண்டும்.



★ரெக்ஸோனாவிலுள்ள கேடில் கிருமி நாசினியாகிய ஒரு ஒப்பற்ற கலப்பு மருந்து. சரும சுகத்திற்கு அதிக சக்திவாய்ந்தது; குணமளித்துப் போஷிக்கும் தைலம் சேர்ந்தது. சுகத்தையளித்துக் காப்பாற்றும் தன்மையுள்ள கேடில் யாவராலும் மதிக்கப்பட்டு, விஞ்ஞானிகளால் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது.

ரெக்ஸோனா ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள். வெட்டுக் காயங்கள், புண்கள், கட்டிகள், கரப்பான் ரணங்கள், முகப்பருக்கள், அரிப்புகள், சனைப்புகள், கடிகள், மச்ச மறுக்கள் முதலிய எல்லா சரும வியாதிகளுக்கும் ரெக்ஸோனா ஆயின்ட்மென்டை உபயோகியுங்கள்.




R.P. 29-23-40 TM

REXONA PROPRIETARY LIMITED

